உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞான விளக்கம்

இயற்றியவர்:-

இலங்கை மெய்கண்டார் ஆதீனம்
ஸ்ரீமத் ஞானப்பிரகாசத்
தம்பிரான் சுவாமி அவர்கள்

1974

...ted at The Thalayan Printing Works
...5, Messenger Street, COLOMBO-12,
Sri Lanka (Ceylon).

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞான விளக்கம்

இயற்றியவர்:-

இலங்கை மெய்கண்டார் ஆதீனம்
ஸ்ரீமத் ஞானப்பிரகாசத்
தம்பிரான் சுவாமி அவர்கள்

1974

---

Printed at The Thalayan Printing Works
115, Messenger Street, COLOMBO-12,
Sri Lanka (Ceylon).

முதற்பதிப்பு — 1974

1000 பிரதிகள்

## நூலின் விஷய அட்டவணை

உ

சிவமயம்

# முகவுரை

நமது ஆன்ருேர்கள் முற்காலத்தில் கல்வி கற்றதின் நோக்கம் கடவுளை அறிந்து அவருடைய திருவடியை அடைவதற்கேயாம். அவர்கள் இளம் பிராயத்தில் ஔவைப் பிராட்டியாரும் மற்றப் பெரியோர்களும் அருளிச் செய்த நீதிநூற்களை (ஆத்தி சூடி, கொன்றை வேந்தன், நன்னெறி, நல்வழி, வெற்றி வேற்கை, போன்ற நூற்களை) பாடசாலைகளில் ஆசிரியர்கள் மூலம் நன்கு படித்து மனப்பாடஞ் செய்தார்கள். கற்கும் பொழுது அந்நூற்களிற் சொல்லிய வாக்கியங்களின் பொருளை நன்கு அறியாதிருந்தாலும், உரிய காலத்தில் உணர்ந்து சீரிய வாழ்வு வாழ்ந்தார்கள். நீதிநூற்களை நாம் இளமையிலே கற்று மனப்பாடம் பண்ண வேண்டும், அப்போதுதான் உரிய காலத்திற் பயன் தரும். தொட்டிலிற் பூண்டகுணம் சுடுகாடுமட்டும் என்பது சான்ருேர் வாக்கு. அதற்கமைய நமதான்ருேர்கள் இளம் பிராயத்தில் வழுவாது படித்த படியாலன்ருே பிற்காலத்தில் அவர்கள் தங்களது வாழ்வைப் புனிதப்படுத்தியது மன்றிப் பிள்ளைகட்கும் அக்கல்வியையூட்டி நன்னெறியதனிற் செல்லும் பாங்கைக் காட்டினர்கள். சமய சாஸ்திரங்களைப் படித்து விளங்கி நடப்பதற்கு நீதிசாஸ்திரக்கல்வி இன்றியமையாதது. அதனலன்ருே அக்காலத்திற் சமயத்தைப் படிக்கக்கூடிய தகுதி பிள்ளைகளுக்கு உண்டானது.

தற்காலத்தில் நம்முடைய கல்வி முறையும் பண்பாடும் வரவர மிகவும் மோசமாகிக்கொண்டே வருகின்றன. இதற்குக்காரணம் உத்தியோகமோகமும் வயிற்றை வளர்த்தாற் போதும் என்னும் எண்ணமுந்தான். சமயப்பண்பாட்டுக்கும் ஆத்மீக வளர்ச்சிக்கும் அஸ்திபாரம் போன்ற நீதி நூல்களை இளம் பிள்ளைகளுக்குப் படிப்பிப்பது இப்போது அவசியமில்லை யென்றும், தேவையென்றால் அவர்கள் பின்பு தாங்களாகவே படிப்பார்களென்றும் சிலர் மதி மயங்கிச் சொல்லிக் கொண்டே வருகிறார்கள். வயிற்று வளர்ப்புக் காகவே தற்காலத்துக் கல்வி பயன் படுத்தப்பட்டுவருகிறது.

நீதி நூல்களைப் படியாவிட்டால் குழந்தைகளுக்கு நீதி நியாயம் தாங்கள் நடப்பது சரியாபிழையா என்னும் பாகுபாடுகள் எங்ஙனம் விளங்கும்? சரியைப் பிழையெனவும், பிழையைச் சரியெனவும் நினைத்துச் செய்வார்கள். தற்காலத்தில் விளையுந்தீமைக்குக் காரணம் சமயப் பண்பாடு நீக்கப்பட்ட கல்வி முறையேயாம்.

சிறுவர் முதல் வயோதிபர் இறுதியாக மனிதகுலத்தின் பண்பாட்டுச் சிதைவுக்கு இன்னுமோர் காரணம் யாதெனில் சினிமாப் படக்காட்சியாகும். அது மாணவ மாணவிகளுடைய படிப்பைக் கெடுத்து இருபாலாருடைய காம உணர்ச்சியைத் தூண்டி வாழ் வைப்பாழாக்குகிறது. தாய் தகப்பனுக்குத் தெரியாத வண்ணம் மாணவ மாணவிகள் சினிமாப் படங்களைப் போய்ப்பார்த்து, பார்த்தவண்ணமே அவர்களும் கொஞ்சிக்குலாவிச் சிறுவயதிலே சிற்றின்ப லீலையில் ஈடுபடுகிறார்கள். இவர்களைத் திருத்துவது மிகவுங் கஷ்டமான காரியம்.

முற்காலத்தில் மாணவ மாணவிகளுடைய தினசரி வாழ்க்கையில் பயபக்தி தெய்வ வழிபாடு முதலிய நற்குணங்கள் அமைந்திருந்தன. அவர்கள் பாடுவது பக்திப்பாடல் முதலியன. தற்காலத்தில் இவையனைத்தும் அருகி அருகி வருகின்றன. பண்பில்லாச் சொற்களையும் செயல்களையுமே சமுதாயத்திற் பார்க்கிறோம். மாதா பிதா குரு தெய்வ வழிபாடு சிறிதுங்கிடையாது. நிந்தனைக்குரிய பாடல்களை "பொப் மியூசிக்" கென்று மனமகிழ்ந்து பாடும் படி சிறுவர்களைத் தற்காலத்தில் சிலர் தூண்டுகிறார்கள். நவ நாகரீகமென்கிறார்கள். பொய் கொலை களவு காமச் செயல்களைப் போற்றிப்பாடுவது எந்தரீதியில் நாகரீகமாகும்? நாமறியோம்.



இந்நிலைமையை நாங்கள் இப்படியே வீணாகப்பார்த்திருப்போமானால் சுபீட்ச நிலை எப்படி வந்தெய்தும்? நமதான்றோர் தேடி வைத்த சமயப் பண்பாடுகள் சிதையச் சிதைய நமது சமயமும் சமுதாயமும் வளராது சிதைவு பெறும்.

இப்போது மாணவ மாணவிகளுடைய புத்தியை நற்காரியங்களினின்றும் திசை திருப்பிக் கிளர்ச்சி வயத்தில் அவர்கள் பயிற்றப்பட்டு வருகிறார்கள். பிறநாட்டு நாஸ்திகக் கொள்கைகளை நாகரீக வாழ்வெனவும், புதுமைக்கு வழிகாட்டும் பண்பாடெனவும் எடுத்துச்சொல்லிப் புகுத்துகிறார்கள். இப்படியான போதனா முறை சிறுவர்களுக்கு நஞ்சூட்டுவது போல்வதாகும். இப்பொழுது நடக்கும் தற்கொலை முதலிய அகால மரணங்களுக்கும் இதுவுமோர் காரணமாகும்.

இப்படியான செயல்களை அவதானித்தே ஆதீனத்தின் கூட்டுறவுப் பிரசார சபை பின்வருங்காரியங்களை வற்புறுத்தி வருகிறது. (1) கல்வி போதனா முறைகள் நீதிநூற்களுக்கமைய இருக்கவேண்டும் (2) சினிமாப்படம் தயாரிப்போர் நீதியையும் பண்பாட்டையும் வளர்க்கும் முறையில் படங்களைத் தயாரிக்க வேண்டும். (3) நாடகம், கூத்து முதலிய வற்றை இயற்றுவோரும் நீதி ஒழுக்கத்துக்கமையச் செயல்பட வேண்டும். (4) ஆலயங்களைப் பராமரிப்

போரும் சமயக் கட்டுப் பாட்டுக்கு விரோதம் வராத வழியில் நடக்கவேண்டும் (5) சமயப்பொதுச் சபைகள் ஒழுக்கத்தைப் பேணிக் காத்துப் போதிப்பவைகளாக அமைய வேண்டும். அத்துடன் பொது மக்களிடையே நீதியையும் பண்பாட்டையும் வளர்க்கும் முறையில் திருவிழாக்காலங்களில் பக்தர்களுடைய திவ்விய சீவிய சரித்திரங்களையும், நாயன்மார்களுடைய ஞானோபதேசங்களையும் பிரசாரஞ் செய்ய ஆவன செய்யவேண்டும். மேற்கூறிய கருத்துக் கிணங்க ஆதீனத்தின் கூட்டுறவுப் பிரசாரசபை தன்னாலியன்ற கைங்கரியங்களை ஆக்கபூர்வமாகச் செய்து வருகிறது.

ஆத்மீகப் பாதையில் முன்னேற விரும்பும் அன்பர்களுக்காக முன்பு ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்க மென்னும் நூலை வெளியிட்டிருக்கிறோம். அதனை அமைதியுடன் கற்று விளங்கிச் சாதனையை நல்ல முறையிற் செய்பவர்களது உள்ளத்திற் சுயஞ்சோதி உதயமாகும். மென்மேலும் முன்னேற விரும்பும் சாதகர்களுக்கு **சிவஞான விளக்கம்** என்னும் நூலை தாளையான் ஆத்மார்த்த அந்தரங்கக் கூட்டத்தாருடைய பேருதவியுடன் இயற்றியிருக்கிறோம். இலங்கை மெய்கண்டார் ஆதீனம் என்னும் ஸ்தாபனம் இலங்கை முழுதும் பரவி விளங்க வேண்டுமென்னுஞ் சீரிய கொள்கைக்குப் பக்க பல மாகத் தாளையான் ஆத்மார்த்த அந்தரங்கக் கூட்டத்தார் நிற்கிறார்கள். அவர்களுடைய உதவி திருவருள் மூலமாமவே வருவதாக நம்புகிறோம். மேலும் தாளையான் அச்சகம் இந்நூலை இலவசமாகப் பிரசுரித்து அன்புடன் தந்ததிற்கு அவர்கள் அனைவர்க்கும் திருவருளை முன்னிட்டு நன்றிகூறுகிறோம்.



சிவஞான விளக்க மென்னும் இந்நூல் சரியை, கிரியை, யோகம் ஆகிய சோபான முறைகளைச் சுருக்கமாகவுந் தெளிவாகவும் எடுத்துக் கூறுகிறது. அதன்பின் சிவஞானத்தை விரிவான முறையில் கல்வியறிவில்லாதவர்களும் இலகுவில் புரியும் வண்ணம் எடுத்துக் கூறுகிறது. தேறித் தெளிந்த மெய்ஞ் ஞானிகளுடைய பாடல்களை ஆதாரமாகக் கொண்டே இந்நூல் இயற்றப்பட்டது. இதனை மெய்யன்பர்கள் மன அமைதியுடன் கற்றுத் தெளிந்து முறையாகச் சாதனை செய்து நன்னிலையடைவார்களாக! சுபம்.

இங்ஙனம்

இலங்கை மெய்கண்டார் ஆதீனம்
ஞானப்பிரகாசத் தம்பிரான் சுவாமிகள்

## மனிதப் பிறவியின் மாண்பு.

மிகவுமரிதான இந்த மானிடதேகத்தை அடைந்தும், புருஷனுய்ப் பிறந்தும், வேதார்த்தங்களை யறிந்தும், எவன் தன்னையறிந்து கரையேற்றிக் கொள்ளும் விஷயத்தில் பிரயத்தனஞ் செய்யவில்லையோ, அந்த மூடனுன வன் துஷ்டப் பிசாசினுற் பீடிக்கப்பட்டவன் போலத் தன்னைத்தானே கொன்றவனுகின்றுன்.

(விவேக சூடாமணி)

முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியிற் பேற்று லறியலாம்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே.

(திருமந்திரம்)

தன்னை யறியு மறிவு தனைப்பெறில்
பின்னைப் பிறப்பில்லை வீடு.

(ஔவை குறள்)

மோன மொழியறிந்து மோனநிலை யுற்றுர்க்கு
மோனமன்றி யுண்டோ மொழி.

(தனிப்பாடல்)

உ
சிவமயம்

# சிவஞான விளக்கம்

## சற்குருவணக்கம்

அழியா அவித்தை அழிந்தொழிய ஞான
விழியா லெரிக்கும் விமலன்—மொழியதனை
நெஞ்சே நினைந்துருக நீங்காக் குருபரன்றன்
கஞ்சமலர்த் தாளே கதி.

தூய குருவருளே தோன்றுத் திருவருளில்
தோய வழிகாட்டுந் துன்பகல—நேயமுடன்
பாராது பார்த்துப் பழகியது தானுகில்
வாராது வன்பிறவி வாழ்வு.

## உபாசனுமூர்த்தி வணக்கம்

புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையும் அடிய னுக்கி இருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி

(திருப்புராணம்)

குறிப்பு :-

நவையறு காட்சி—குற்றமற்ற ஞானக் காட்சி. என்னையும் அடியனாக்கி — என்னையும் சிவனடியனாக்கி. சிவஞான நிட்டை கைகூடியவர்களே சிவனடியார்கள். ஞானசற்குருவருளால் திருவடி யாதெனத் தெளிந்து அதிற்சங்கற்பமற நிற்றல் சிவஞானநிட்டை யெனப்படும். திருவடியென்பது வியாபகமாகவும் சுயம்பிரகாசமா கவும் விளங்கும் பெருவெளி (ஞானாகாசம்)

திருவடி என்பது யாதெனப் பின்வருங்கவி அறிவுறுத்துகிறது.

திருவடி யாவது திகடரு பெருவெளி
திருவடி யாவது திருவருள் உறைவிடம்
திருவடி யாவது சின்மய மாக்கும்
திருவடி மோனத் திறமருள் தருமே.

குறிப்பு:-

திகடரு(திகழ்+தரு)பெருவெளி-பிரகாசிக்கின்ற ஞானாகாசம்
சின்மயம் (சித்+மயம்) ஆக்கும்—ஞானமயமாக்கும்.
மோனத்திறமருள் தருமே—மோன நிலையை அடைதற்குரிய திறத்தை உண்டாக்கி அருள்புரியும்.

மனிதர்கள் ஈடேறும் பொருட்டு மெய்ஞ் ஞானிகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்குபடி களை வகுத்திருக்கிறார்கள். இந்நான்கு படித்துறை வழியே சென்று முத்திப் பேற்றை மனிதர்கள் அடை கிறார்கள். இதைப்பற்றித் தாயுமான சுவாமிகள் பின் வருமாறு அருளுகிறார்:-



விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே.

குறிப்பு :-

நல்லவர்களாலே விரும்பப்படும் சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய இவைநான்கும் சோபானமுறை யில் அரும்பு, மலர், காய், கனிகளைப்போல் ஒன்றற் கொன்று ஏதுவாக விளங்குகின்றதல்லவா ? சோபான மென்பது மேலிடத்திற்குச் செல்வதற்காக அமைக்கப் பட்ட படி. சிவஞானம் எய்தி வீடுபேற்றை அடை வதற்குச் சரியை கிரியை யோகம் ஆகிய மூன்றுஞ் சோபானமாம்.

## சரியை

சரியையென்பது தீய ஒழுக்கங்களை அறவேவிட்டு நல்லொழுக்கங்களை மேற்கொண்டு நடத்தலாம் (ஸர்-ஸரதி-நட) ஆத்மீக பாதையில் முன்னேற விரும்பும் அன்பர்களுக்கு நல்லொழுக்கம் இன்றியமையாதது. உடல் தூய்மை உள்ளத் தூய்மை இரண்டையுங் கொடுத்து முன்னேறச் செய்கிறது. நல்லொழுக்கம் இக லோக பரலோக நன்மை இரண்டிற்கும் வித்துப்போன் றது. வித்தில்லாவிட்டால் முளையேது, காய்கனியேது?

நம்மனோரது நல்லொழுக்கத்திற்கும் நற்செய்கைக்கும் பண்பாட்டிற்கும் ஆக்கமும் ஊக்கமும் தருவது நல்லோர் சகவாசம். நல்லவர்களுடைய சகவாசம் எத்தகைய சிறப்புடையதென்று பின்வரும் நேரிசை வெண்பா அறிவுறுத்துகிறது.

நல்லாரைக் காண்பதுவு நன்றே, நலமிக்க
நல்லார்சொற் கேட்ப துவுநன்றே — நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே அவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று

(ஔவைப்பிராட்டி)

குறிப்பு:-

மேலான நற்குணமுடையவர்களை (நாம் சென்று) காண்பதுவும் நல்லதே; நன்மைமிகுந்த அன்னாருடைய சொற்களைக் கேட்டு அதன்படி நடப்பதுவும் நல்லதே; அவர்களுடைய நற்குண நற்செயல்களைப் பற்றிப்புகழ்ந்து பேசுவதும் நல்லதே. அவர்களோடு நட்புக்கொண்டு வாழ்வதுவும் நல்லதே, மேலும் அவர்களுடைய கிருபையால் நல்லறிவும், நன்னோக்கமும் நல்வாழ்வும் உண்டாகின்றன.

மாசற்ற சிவஞானிகளுடைய சத்சங்கத்தால் அடையவேண்டிய பேறனைத்தையும் (நாம் பரிபக்குவிகளானல்) எளிதில் அடையலாம். நம்மனோரால் இலகுவில் அகற்ற



முடியாத தீயகுணங்களையுந் தீய செயல்களையும் அகற்றும் முறைகளை அவர்கள் கருணையுடன் தெரிவிக்கிறார்கள். அத்துடன் நன்னெறியில் நாம் செல்லவேண்டிய உரியமுறைகளையும், அடையவேண்டிய இலட்சியத்தையும் விளக்கி அறிவுறுத்துகிறார்கள்.

யோக சாஸ்திரத்தில் கெட்டகாரியங்களைச் செய்யாது விடல் இயம மெனப்படும். நற்குண நற்செயல்களை மேற்கொண் டொழுகுதல் நியம மெனப்படும். பின்வருஞ்சூத்திரம் இயம நியமமிரண்டையும் விளக்குகிறது.

பொய்கொலை களவு காமம் பொருணசை
இவ்வகை யைவையும் அடக்கல் இயமமும்,
பெற்றதற் குவத்தல், பெருந்தவந் தூய்மை
மற்றறி வுணர்தல் வழிபடல் நியமமும்

எச்சமயத்தவரும் தீமையை விடும்படியும் நன்மையைக்கடைப்பிடிக்கும் படியுங் கூறுவர். இன்னும் நல்லொழுக்க மில்லா விட்டால் ஆத்மீகத்துறையில் முன்னேற முடியாதெனப் பின்வரும் நேரிசை வெண்பா எடுத்துக்கூறுகிறது.

நல்லொழுக்க மில்லாது ஞானநூ லோதியும்
நல்லபய னில்லை நயந்துகேள்—நல்லொழுக்கம்
ஞானமுற நற்சங்கஞ் சேர்த்து விசாரத்தை
ஊனமுற வூட்டும் உவந்து

குறிப்பு:-

நல்லபயனில்லை - நல்ல பிரயோசன மில்லை, நயந்து கேள் - விரும்பிக்கேள். நற்சங்கம் - நல்ல சாதுக்கள் சங்கம் (நல்ல சிவஞானிகள் உறவு.)

விசாரத்தை — ஞான விசாரணையை. அஃதாவது ஆன்மா என்பது யாது; அனான்மா என்பது யாது; இவையிரண்டுங் கூடும் பந்தம் என்பது யாதெனச் சற்குருவிடம் விசாரித்தல். நல்லொழுக்கம் நற்சங்கத்தைமேவச் செய்து ஆன்மவிசாரணையில் ஈடுபடுத்திக் குற்றமற்ற சிவஞானத்தைக் கொடுக்கும்.

மேலுஞ் சிவஞானிகளுடைய கருணையும் உறவும் மெய்ஞ்ஞானநெறியிற் செல்லும் அன்பர்களுக்கு இன்றியமையாதன. பட்டினத்தடிகள் சிவஞானிகளுடைய இணக்கத்தின் சிறப்பைப் பின் வருங்கவியால் விளக்குகிறார்.

நல்லார் இணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுளதோ ?

குறிப்பு:-

இங்கே நல்லார் என்றது மாசற்ற சிவஞானிகளை. நின்பூசை — தேவரீரைப் பூசிக்கும்பூசை (சிவபூசை).



நேசம் — அன்பு. அன்பில்லாதபூசை பிரயோசனத்தைத்தராது. இங்கே ஞானமென்றது சிவஞானத்தை. சிவனடியைச் சிந்தித்தலால் உண்டாகும் ஞானம் சிவஞான மெனப்படும். சிவஞானம் ஒன்றுமே அஞ்ஞானத்தை நீருக்கிப் பவமதனை அறமாற்றும். இச்சிவஞானம் வியாபக விளக்கமாகப் பிரகாசிக்கில் பாசஞானம் பசுஞானம் ஆகிய இரண்டுந் தலைதூக்காவாம்.

## கிரியை

சரியை நெறியில் ஒழுகிவந்தவர்களுக்குக் கிரியை நெறி இலகுவாகவிளங்கும். அன்னவர்களுக்கே அதில் ஆர்வம் உண்டாகும். மற்றவர்களுக்கு வீண்காலம்போக்குவது போலத்தெரியும். கிரியை இரண்டாவதுபடி. கிரியையாவது தனது இஷ்ட தெய்வத்தை முழு அன்புடன் புறத்திலாவது அகத்திலாவது முறைப்படி பூசை செய்வதாம்.

இங்ஙனம் பூசை செய்வதால் பக்தர்களுக்கு அந்தக்கரண சுத்தி (மனச்சுத்தி) ஏற்பட்டு ஈசுவர கடாட்சத்தினால் சில அந்தரங்க விஷயங்கள் அறிவிக்கப்படுகின்றன. அவர்கள் மேலும் மேலும் செல்லவேண்டிய பாதை எத்தகையதென்றும், யாருடன் ஆத்மீகத் துறையில்

பழகவேண்டுமென்றும், காலத்துக்குக் காலம் செய்ய வேண்டிய சாதனைமுறை யாதென்றும் எளிதில் பக்தியின் முதிர்ச்சியினுல் அறிகிருர்கள்.

## யோகம்

யோகம் மூன்ருவதுபடி. அந்தக்கரணசுத்தி ஏற்பட்டவர்க்கே யோகமார்க்கம் சித்திக்கும். யோகமாவது தனது இலட்சியத்தில் ஒரே மனசாயிருத்தல். அஃதாவது மனம் புறவிடயங்களிற் செல்லாது ஏகாக்கிர சிந்தையுடன் ஒன்றன்கண் நிற்றலாம்.

யோகமார்க்கம் பலவித படிகளையும் முறைகளையும் உடையது. ஒவ்வொரு யோகமுறைக்கும் அததற்குரிய பலனுண்டு. சித்தம் விடயநாட்டங்களிற் செல்லாது ஆத்மீகத்துறையிற் சென்று வஸ்து நிச்சயத்தை ஐயமறத் தெளிதற்கு ஆன்ருேர்கள் ஐவகை யோகங்களை வகுத்திருக்கிருர்கள். அவையாவன (1) மந்திரயோகம் (2) பரிசயோகம் (3) பாவயோகம் (4) அபாவயோகம் (5) மஹாயோகம். இவை ஐந்தும் நிதித்தியாசனத்துக்கு (மனந்தெளிதற்கு) அங்கமாம்.

"சித்தம் ஏகாந்த தரிசனந் தெளிதலென்பார்"
(—கைவல்லிய நவநீதம்)



### (1) மந்திரயோகம்

பிரணவ முதலிய மந்திரங்களைச் சற்குருநாதன் அருளிய முறைப்படி இடைவிடாது சிந்தித்தலாம். அங்ஙனம் சிந்தித்தலால் உதயமாகுஞ் சிற்சுகத்தில் மனம் ரமித்தலே மந்திரயோகத்தின் பயன்.

### (2) பரிசயோகம்

அந்த மந்திரயோகத்தோடு மனமும் பிராணவாயுவும் ஒன்ருய்க்கூடி மூலாதாரத்திலிருந்து சுழுமுனை மார்க்கமாகச் சென்று சிரசின் மத்தியில் இருக்கின்ற வியாபகமான ஆன்மப்பிரகாசத்தில் மனமசையாது லயித்திருப்பது பரிசயோக மெனப்படுவதாம்.

பின்வருங் கவி மேற்கூறிய இருவகை யோகத்தைப் பற்றி விளக்குகின்றது:-

ஓங்கா ராதிகள் அனுசந்தானத்தாற் பரத்தின்
உள்ளமடங்குதலே மந்திரயோக மதனேு
டீங்காகு மனம்பவன மொன்ருய் மூலத்தின்
இருஞ்சுழினை வழிசென்று சென்னி நடுவிருந்த
தேங்கான்ம ஒளியில் மனேலயமாதல் பரிசம்
(—வேதாந்த சூளாமணி)

## (3) பாவயோகம்

தனது இஷ்டதெய்வத்தை உருவமாகத்தியானிக்கும் முறையில், பாதந்தொடங்கிச் சிரசீருயுள்ள தனது தெய்வத்துடைய அவயவங்களை ஒவ்வொன்ருக நேதி களைந்து (நீக்கி விட்டு) அவயவி மாத்திரமாய் அமைந்துள்ள வியாபக சொரூபத்தில் மனேலயமாதல் பாவ யோக மெனப்படும். அவயவத்தை உடையது அவயவி யெனப்படும். இங்கே அது வியாபகமாய் விளங்கும் சிற்பிரகாசம்.

## (4) அபாவயோகம்

நாமரூபமனைத்துங் கற்பிதமென்றும் அவையனைத்தையும் நேதிகளைந்து (பொருளல்லவென்று நீக்கி விட்டு) பாவனையிறந்து அதீதமாய் விளங்கும் சிவசொரூபத்தில் சிந்தையடங்குதல் அபாவயோகமெனப்படும் (அபாவம்- இன்மை, அஃதாவது நாமரூபமனைத்தும் இன்மை)

## (5) மஹாயோகம்

சங்கற்பம் உதித்தொடுங்கின விடத்தும், அறிவறியாமையிடத்தும் (சகல கேவலத்திலும்) ஒருதன்மையாய் விளங்குந் தன்வடிவாஞ் சிவசொரூபத்தில் மனேலயமாதலே மஹாயோகமெனப்படும்.



வினு:- இங்ஙனங்கூறிய ஐவகை யோகத்தினுனும் ஒவ்வொன்றினும் சிவசொரூபத்தை அடைதலின் இவைகட்குத் தாரதம்மியம் (ஏற்றத்தாழ்வு) வந்த காரணம் என்னை ?

விடை:- ஒன்றென்பதின்றி யாவுமாய் நிறைந்திருக்கின்ற சிவசொரூபம் (1) இவ்வட்சரத்தின் அடங்கி நின்று வெளிப்பட்டதெனக் கண்டமையானும்,
(2) அங்ஙனம் நிறைந்துள்ள சிவசொரூபம் இத்தேகத்தின் நின்று வெளிப்பட்டதாகத் தரிசித்தமையானும்
(3) அவயவங்களை நீக்கினவிடத்துள்ள அவயவியைப் பார்க்கும் பாவனையால் உதயமா மென்றமையானும்,
(4) அப்பாவனையிறந்து அதீதமாய் விளங்கு மென்றமையானும்,
(5) மனம் உதித்தவிடத்து ஒடுங்கின் உண்மை விளங்குகின்ற தென்றமையானும்,

இவ்வைந்திற்கும் ஏகதேசமான தோஷங்களும் இவை ஒன்றற்கொன்று அறிவு வியாபித்து வருதலின் உயர்வு தாழ்வான தாரதம்மியங்களும் உண்டாகும்.

இம்முன்னிலைகள் யாவுமின்றி சிந்திக்கும் மனத்தின்கண் நிறைந்திருக்கின்ற சுத்தசைதன்னியமே எங்கும் நிறைந்திருக்கின்ற தென்னும் அத்துவித

வஸ்துவே முக்கிய மெனவும், ஏனைய ஐந்து யோகங்களும் கவுண(உபசார) மெனவும் வந்தமையாலென்க.

இவ்வைந்து யோகமும் நிதித்தியாசனத்திற்கு அங்கமாகவும், அறுவகைச் சமாதிக்கு அநுகூலமாகவுங் கண்டு இவற்றிற்கு அதீதமான மெய்ப்பொருளைச் சகசத்தில் அநுஷ்டிக்கும் படியாக ஆன்றோர்கள் கூறினார்கள்.

## ஞானம்

ஞானமெனினும், அறிவெனினும், போதமெனினும், தெளிவெனினும், உணர்வெனினும், சைதன்னிய மெனினும் ஒக்கும்.

ஞானமென்பது யாதென விசாரிக்குமுன் அஞ்ஞானத்தையும் (அறியாமையையும்) அதன் காரியங்களையும் நன்கு நாம் விளங்கவேண்டும். அப்பொழுதுதான் அவை அனைத்தையும் விலக்கிவிட்டு மெய்ப்பொருளாகிய அறிவுசொரூபத்தை நன்கு அறிய முடியும்.

உபநிடதம் பின் வருமாறு கூறுகிறது:-

ஓதரிய வஞ்ஞானந் தனையறியா
வுணர்வி தற்கோ ருறுதி மூல
மாதன்மனோ விருத்தியவை யகற்றியொளி
தனையறிதல் அகண்டா காரங்
காதலினால் அருளியசற் குருவருளாற்
பெறுமகண்டா கார மாகுஞ்
சாதகமே தானாகி யிருப்பதே
தநுசொருப சாட்சி யாமே



குறிப்பு:-

அன்னியத்தை அறியும் உணர்வு தன்னுடைய நிஜ சொரூபத்தை உள்ளவாறு அறியாதிருக்குந் தன்மை அஞ்ஞானம் அல்லது அறியாமை யெனப்படும். இவ்வஞ்ஞானம் நிலைத்திருப்பதற்குக் காரணமாயிருப்பது மனோவிருத்தியாம். ஞானத்திற்கு அதிகாரி அவ்வஞ்ஞானத்தையும் மனோவிருத்தியையும் நீக்கி ஆன்மாவின் சிற்பிரகாசத்தை அறிதல் அகண்டாகார ஞானமெனப்படுவதாம். அன்போடு தத்துவ உபதேசஞ் செய்த சற்குருவினது கருணையினால் அடையத்தகுவது அகண்டாகார ஞானம்; வேறன்று. அச்சிற்பிரகாசம் தானாகப் பல்லூழிகாலம் பழகவேண்டியது சாதகமெனப்படும். இச்சாதனைக்குக் காரணமாயிருப்பது தனது நிஜ சொரூபமாய் விளங்குங் கூடஸ்தனும். ஆன்மாவின் நிஜசொரூபமாகிய சிற்பிரகாசம் கூடஸ்தனெனப்படும். சீவசாட்சியெனினும் கூடஸ்தனெனினும் ஒக்கும்.

கருணாகர சுவாமிகள் அருளிச் செய்த உபநிடதம் என்னும் நூலின் விருத்தியுரையில் ஈசூர் ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள் பின்வருமாறு கூறுகிறார்-:

தனக்கென நிஜசொரூபமொன்றின்மையின் ஓதரிய அஞ்ஞானமெனப்பட்டது. அஞ்ஞானம், மனோவிருத்தி

அகண்டாகாரம் என்பவற்றுள், முன்னைய விரண்டும் பகிர் முகத்திற்கும், பின்னைய தொன்றும் அந்தர் முகத்திற்கும் இயைந்தன வென்றுயிற்று.

யாது கற்கினும் எத்தவமுயலினும் ஞானப்பிரகாசங் காண்டல் அரிது. அதனை ஞான சற்குருவினது கிருபையாற் காண வேண்டும். அதனை வழுவாது காத்தல் அரிது. அதனையன்றி அனைத்தும் இன்றென அறிதல் அரிது. அவ்வொளியே தானென அறிதல் அரிதினும் அரிது. அவ்வொளியைச் சத்துச்சித்தானந்தமாகவும், அந்தச் சத்துச்சித்தானந்தத்தை அநிர்த சடதுக்கமாகவும் பகுத்துணர்தல் மிகவும் அரிது. இங்ஙனம் மறவாது கண்டு பழகிச் சாதித்தலைச் சாதகம் என்றுர். சாதகமே தானுகியிருப்ப தென்பது விடாமுயற்சியைக் குறித்தற்கென்க. இக்கவி தானேதானுதற் கேற்றநிலையைக் கூறுகிறது.

பின்வருங் கவி ஞானப்பிரகாசத்தினுல் ஏற்படுஞ் சிறப்பை மேலும் எடுத்துக்கூறுகிறது:-

நேரிசைவெண்பா

அகத்தில் புறத்தில் அருளொளியைக் கண்டு
சுகவெளி தானுன தூயோர்—சகமயக்க
மற்ற அறிஞர்காண் நன்னெஞ்சே அன்னவரை
உற்ற துணை யென்றே யுணர்.



குறிப்பு:-

அருளொளி—ஆன்மவொளி (ஞானப்பிரகாசம்)
சுகவெளி — இன்பமயமாய் விளங்குஞ் சிதாகாசம் (சுத்தசிவம்)
சகமயக்க மற்ற அறிஞர்—பிரபஞ்சத்தால் உண்டான மயக்கம் நீங்கிய ஞானிகள்.

## விருத்தித்திரயம்

மெய்ஞ்ஞானம் யாதென விசாரணை செய்யமுன் மனத்தினது தன்மையை அறிதல் சிறந்தது. மனம், அந்தக்கரணம், சங்கற்பம் என்பன பொதுவாக நினைவையே குறிக்கும்.

விருத்தி யென்பது இங்கு நினைவின் விரிவைக் குறிக்கிறது, திரயம் என்றுல் மூன்று. நம் நினைவு மூன்று விதமாக விரிந்து ஒடுங்கும். நினைவு மூன்று விதமாக விரிந்து செயற்படுந் தன்மையை விருத்தித்திரயம் என்பர். விருத்தித்திரயங்களாவன (1) மனேவிருத்தி (2) அகண்டாகார விருத்தி (3) விவேகவிருத்தியாம்.

### (1) மனேவிருத்தி

மனஞ்சார்ந்ததின் வண்ணமாய் நிற்கும். விடயங்களைச் சார்ந்து விடயமயமாய் நிற்கும் பொழுது மனேவிருத்தி யென்று கூறுவர்.

விருத்தியின் தொழில் அஞ்ஞானத்தை (அறியாமையை)க் கெடுப்பதாம். மூவகை விருத்தியும் மூவகையான அஞ்ஞானத்தைக் கெடுப்பதாம். மனோ விருத்தி இங்கு எந்த அஞ்ஞானத்தைக் கெடுக்கிறது? நாமரூபத்தைத் தெரியாதிருக்கும் தன்மை தூல அஞ்ஞானமெனப்படும். மனோவிருத்தி தூல அஞ்ஞானத்தைக் கெடுக்கும் ஆற்றல் உடையது. அப்படித் தூல அஞ்ஞானத்தைக் கெடுத்து நாமரூபப் பிரபஞ்ச ஞானத்தையே உண்டாக்கும். இதன் விளக்கம் பின்வருமாறு:-

சுழுத்தியில் நினைவு ஒடுங்கியவிடத்து நாமரூபந் தெரிவதில்லை. நினைவு விரியும் பொழுது நமக்கு நாமரூபப் பிரபஞ்சந் தெரிகிறது. விரிந்த நினைவு நாமரூபத்தைப் பற்றிப் பிடிப்பதனால் நாமரூபத்தை தெரியாதிருந்த அஞ்ஞானம் நீங்கி நாமரூபந்தெரிகிறது. நாமரூபத்தைத் தெரியாத அஞ்ஞானத்தை தூல அஞ்ஞானமென்பர். இத்தூல அஞ்ஞானத்தை நீக்குவது மனோ விருத்தி. நினைவு விடயங்களைச் சார்ந்து விடயமயமாய் நிற்கும்பொழுது மனோவிருத்தியென்பர். மனோவிருத்தியால் வருவது பாசஞானம் (பிரபஞ்சஞானம்)



## (2) அகண்டாகாரவிருத்தி

மனம் அகண்ட வெளிமயமாய் நிற்கும் பொழுது அகண்டாகாரவிருத்தியென்பர். இவ்வகண்டாகாரவிருத்தியானது சாட்சிசொரூபத்தை மறைத்திருந்த அஞ்ஞானத்தைக் கெடுக்கிறது. அங்ஙனம் கெடுத்தவிடத்து சாட்சி சொரூபமாகிய ஆன்மா தானாகவே பிரகாசிக்கிறது. இச்சாட்சி சொரூபமே ஆன்மாவின் நிஜ சொரூபம். இதைக் கூடஸ்தனென்றுங் கூறுவர். கூடஸ்தனை அநுபவத்தில் அறிதலே தன்னை அறிதல் என்பதின் கருத்து. இதுவே ஆன்மதரிசனம். இதுவே ஞானகதப் பிரத்தியட்சம். இந்த ஞானகதப் பிரட்தியட்சமே சிவஞானம் விளைதற்கு ஏது.

## (3) விவேகவிருத்தி

ஆன்மாவின் நிஜ சொரூபத்தை (கூடஸ்தனை) அறிந்து அதுவே எங்கும் நிறைந்திருக்குஞ் சுத்த சைதன்னியமென்றும், அச்சுத்த சைதன்னியமே நானென்றும் இடைவிடாது பழகல் விவேக விருத்தியெனப்படும். இவ்விவேகவிருத்தி சீவப்பிரஹ்ம ஐக்கியத்தை மறைத்துள்ள மறைப்பைக் கெடுத்து ஐக்கியநிலை (அத்துவிதநிலை) எத்தகைய தெனக்காட்டும். காட்டவே சாட்சி பேதம் நீங்கும்.

மேற்கூறிய விருத்தி ஞானத்திரய வியல்பு பற்றி உபநிடதம் பின்வருமாறு கூறுகிறது.

மேயமனு விருத்தியகண் டாகார விருத்திவிவே
கவிருத் தியொடிவையே விருத்திகள் மூன்றுகும்
ஆயமனே விருத்திவிட யாஞ்ஞானம் போக்கி
அவ்விடயந் தோற்றுவிக்கும் அகண்டமெனும் விருத்தி
தூயசிதஞ் ஞானத்தைப் போக்கியச் சாட்சியையே
தோற்றுவிக்கும் விவேகவிருத் தியுமகண்டாஞ் ஞானம்
போயிடச்சீ வன்சாட்சி பூரணமே தானும்
போதநிலை பொருத்து மெனப் புகன்றிடுநான் மறையே

குறிப்பு:-

(1) மனேவிருத்தி விடயத்தை மறைத்திருந்த அஞ்ஞானத்தைப்போக்கிச் சீவனுக்கு அவ்விடயத்தை விளங்கச்செய்யும். (2) அகண்டாகார விருத்தி சாட்சியாகிய கூடஸ்தனை மறைத்திருந்த அஞ்ஞானத்தைப்போக்கும். அப்பொழுது சாட்சி தானுகவே பிரகாசிக்கும். (3) விவேகவிருத்தி அகண்ட அஞ்ஞானமான மாயையைப்போகச் செய்யும். அப்பொழுது சீவசாட்சியாகிய கூடஸ்தனும் ஈசுவர சாட்சியாகிய பிரஹ்மமும் ஏகமாய்ப் பரிபூரணமாய் விளங்கும். அங்ஙனம் விளங்கும் பரிபூரண நிலையே தானேதானும் போதநிலை.

மனேவிருத்தி முன்னிலைச் சுட்டினுல் விளைவது. பாச ஞானத்தையே விருத்தி செய்யும், தற்கால பௌதிக விஞ்ஞானிகளுடைய ஞானம் பாசஞானம்.



அறியப்படும் பொருட்களை ஆராய்ச்சி செய்வதால் உண்டாகும் ஞானம் பந்தத்தை விருத்தி பண்ணுமே யொழிய பந்தத்தை நிவிர்த்திசெய்யாது. ஆன்மாவின் நிஜ சொரூபத்தை அறியாத காலவரைக்கும் மனம் விடயங்களையே பற்றிப்பிடிக்கும். அப்படிப்பற்றிப் பிடிக்கும் மனத்திற்கும் சிவஞானத்திற்கும் வெகுதூரமாம்.

முன்னிலைச் சுட்டை நீக்குவதினுல் உண்டாகும் பேற்றைப்பற்றித் தாயுமான சுவாமிகள் பின்வருமாறு அருளிச்செய்கிறுர்.

முன்னிலைச் சுட்டொழி நெஞ்சேநின்
போதம் முளைக்கி லையோ
பின்னிலைச் சன்மம் பிறக்குங்கண்
டாயிந்தப் பேய்த்தன மேன்
தன்னிலை யேநில்லு, தானே
தனிச்சச்சி தானந்தமாம்
நன்னிலை வாய்க்குமென் சித்தியுங்
காணும் நமதல்லவே.

குறிப்பு:-

மனமே! முன்னிலைச் சுட்டினை நீக்குவாயாக! உன்னுடைய சீவபோதம் தலைதூக்கில், ஐயோ பின்பு பிறவியுண்டாகும். இதை நன்கு அறிதி. இத்தகைய பேய்த்தன்மை உனக்கு எதற்கு? உனது நிஜ நிலையாகிய வியாபகநிலையில் திடங்கொண்டு நில். அங்ஙனம் நிற்பாயாகில் தானேதானுக விளங்கும் ஒப்பற்ற

சச்சிதானந்த நன்னிலை காலக்கிரமத்தில் கைகூடும். அத்துடன் எட்டுவகைச் சித்திகளும் பலிக்கும். ஆனால் முன்னிலையாகக் காணப்படும் பொருட்களும் சித்திகளும் நமக்குரியனவல்ல.

## அவஸ்தாத்திரயம்

ஞானசாதகன் ஆன்மாவை அறிதற்குமுன் அவஸ் தாத்திரயத்தை அறிதல் மிகவும் நன்று. அங்ஙனம் அறிதலால் மூன்றவஸ்தைதையையும், முத்தேகத்தையும், முக்காலத்தையும் பொருளல்லவெனத்தள்ளி மெய்ப் பொருளை அறியலாம்.

சாதாரணமாக நாம் மூன்று அவஸ்தைகளில் சீவிக் கிறோம். அவஸ்தை என்பது நிலை: அஃதாவது உயிரின் நிலை. திரயம் என்றால் மூன்று. அவஸ்தாத்திரயமென்றால் உயிர் சீவிக்கும் மூன்று நிலை. அவையாவன. (1)சாக்கிரம் (விழிப்புநிலை) (2) சொப்பனப் (கனவு) (3) சுழுத்தி (கனவுதோன்றாத தூக்கம்) இம்மூன்று அவஸ்தைகள் தினமும் மாறிமாறித் தோன்றுகின்றன. இம்மூன்று அவஸ்தைகளையும் மாற்றங்களையும் அறிவது நாமாகிய உணர்வு, நம்மால் அறியப்படும் அவஸ்தைகளும் மாற் றங்களும் நாமல்ல. அவஸ்தைகள் நம்மை அறியா. நாம் அவற்றை அறிதலால் நாமே உணர்வு வடிவாகிய அறிவு. இவ்வுணர்வை அநுபவத்தில் அறிதலே ஆன்ம ஞானம்; வியாபகவிளக்கமாக விளங்கும் ஆன்மநிலை.



சாக்கிராவஸ்தையில் நாம் காணும் இவ்வுடம்பு தூல தேகம் எனப்படும். தூலம் என்றால் பருமை. தூல தேகமயமாய் நமதுமனம் சாக்கிரத்தில் விவகரிக் கிறது. சொப்பனவஸ்தையில் தோன்றும் உடம்பு சூக் கும தேகமெனப்படுகிறது. நமதுமனம் சொப்பனவஸ் தையில் சூக்கும தேகமயமாய் நின்று விவகரிக்கிறது. சுழுத்தியவஸ்தையில் நமதுமனம் நாமரூபத்தை நழுவ விட்டுப், பாழாய் விளங்குஞ் சூனியத்தில் லயமாகிறது. நாமரூபத்தின் இன்மையே பாழாய்விளங்குகிறது. இப் பாழையும் சாட்சியாய் அறிந்து கொண்டிருக்கும் உணர்வே நமது உண்மையான சொரூபம். இதுவே துரியநிலை.

நமது நினைவு நாமரூப விவகாரங்களில் ஈடுபடும் போது சாக்கிரமுஞ் சொப்பனமுந் தோன்றுகின்றன. சாக்கிரத்தில் நம்மனம் உலகவிவகாரங்களிற் சென் றுழன்று சஞ்சரிக்கின்றது. இதனாற்களைப்படைந்த மனம் ஓய்வடைவதற்காகத் தூக்கத்திற்குச் செல்கின்றது. ஆனாற் சம்பூரண ஓய்வடையாததாற் சொப்பனம் தோன்றுகின்றது. சொப்பனத்தின் மூலகாரணம் யாது? விழிப்பு நிலையில் விவகாரத்தாற் களைப்படைந்த மனம்

தூக்கத்திற் பூரண ஆறுதலடையாததினுல் மறுபடியுஞ் சாக்கிர வாசனையுடன் கூடி உள்ளதையும் இல்லதையும் எண்ணிறந்த சாயாரூபத்தில் தோற்றுவிக்கின்றது. இச்சாயாரூப நிலையே சொப்பனமெனவுங் கனவெனவுங்கூறுவர்.

நினைவு நாமரூப விவகாரத்தை மறந்து பூரணமாக ஒடுங்கிய விடம் பாழாகிய சுழுத்திநிலை. இந்நிலையில் எவ்வித நாமரூபங்களுந் தோன்ரு. இதைச்சீவப்பாழென்றுஞ் சூனிய மென்றுங் கூறுவர். கனவற்ற இத்தூக்க நிலைதனில் நாம் தினமும் உலகப்பிரச்சனைகள் யாவையும் மறந்து ஓய்வு பெறுகிறேம். ஆனுல் இது உண்மையான அறிவுநிலையில் நிகழும் ஓய்வு அல்ல. ஏனெனில் நமது உணர்வு பாழ்மயமான நிலையிலிருக்கிறது. இந்த மயக்கநிலை அஞ்ஞானத்துடன் கூடியது. இவ்விடத்தில் உணர்வு தன்னையும் அறியாது, அந்நியத்தையும் அறியாது. இது விரும்பத்தக்க நிலையல்ல.

ஸ்தூல சரீரத்தில் சாக்கிராவஸ்தையும், சூக்கும சரீரத்தில் சொப்பனுவஸ்தையும், காரண சரீரத்தில் சுழுத்தியவஸ்தையும் தோன்றி விளங்குவனவாம். சாக்கிராவஸ்தையில் இந்திரிய விருத்தியின் விளக்கமும், சொப்பனுவஸ்தையில் மனேவிருத்தியின் விளக்கமும்



மிகுதியாக இருப்பனவாம். சுழுத்தி அவஸ்தையிலோ அவித்தியா விருத்தி மாத்திரம் இருப்பதாம். இந்த மூன்று விருத்திக்கும் அவற்றிற்கு விஷயமாயிருப்பனவற்றிற்கும் ஆன்மா சாட்சியாய் இருக்கின்றதென்பதைச் சந்தேக விபரீதமில்லாது அநுபவத்தில் உணர்ந்தவர் அவஸ்தாத்திரய சாட்சியாக விளங்குவர் என்பது திண்ணம். சீவசாட்சியாய் விளங்கும் சுயம்பிரகாசமே துரிய நிலையெனப்படும்.

## சீவசாட்சி

சிவஞானத்தை அடைவதன்முன் ஆன்மாவின் நிஜ சொரூபமான சீவசாட்சியைப் பற்றி அறிதல் வேண்டும். தன்னை அறிந்து அருள் நாட்டத்திலிருந்தால் சிவஞானம் உண்டாகும். அந்தக்கரணத்திலும் அதன் விருத்தியிலும் உள்ள சேதனம் சாட்சியெனப்படும். தேகாதி பிரபஞ்சங்களுக்கு வேருயிருந்து கொண்டு சம்பந்த மற்று (விருப்பு வெறுப்பு முதலிய தொடர்புகள் யாவுமற்று) அறியும் தன்மையுடையது இச்சீவசாட்சி.

சாட்சியாகிய ஆன்மா (1) சாக்கிராவஸ்தையில் சாக்கிரப் பிரபஞ்சத்திற்கு மனேவிருத்தியை முன்னிட்டுள்ள இந்திரிய விருத்தி வாயிலாகச் சாட்சியாய் விளங்குகிறது,

(2) சொப்பனுவஸ்தையில் சொப்பனப்பிரபஞ்சத்திற்கு மனேவிருத்தி வாயிலாகச் சாட்சியாய் விளங்குகிறது,

(3) சுழுத்தியவஸ்தையில் அங்கு விளங்கும் ஆனந்தத்திற்கு அவித்தியாவிருத்தி வாயிலாகச் சாட்சியாய் விளங்குகிறது.

## துரிய நிலை

மெய்ஞ்ஞான சாதனையில் வெற்றியடைய வேண்டுமாகில் நாம்பாழையுங் கடந்து துரிய நிலையை அறிந்து அவ்விடத்தில் வாழப் பழகவேண்டும். நினைவினுற் சாக்கிரமுஞ் சொப்பனமும் உண்டாகிறதென்றும், நினைவின் ஓய்வினுல் சீவப்பாழாகிய சுழுத்தி அவஸ்தை உண்டாகிறதென்றும் நாம் அறிந்தோம். சுழுத்தியைக் கடந்த துரிய நிலையை அடைதற்குச் சங்கற்ப நாசமுண்டாக வேண்டும்.

சங்கற்பம் எங்கேயிருந்து தோன்றுகிறதென்று அநுபவத்தில் நாமறிந்தாற்முன் ஆன்மதரிசனம் நன்முகக் கைகூடித் துரியநிலை எத்தகையதென விளங்கும். துரியம் என்பது நாலு; அஃதாவது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி மூன்றுங்கடந்த நாலாவது நிலை; இஃது துரிய நிலையெனப்படும். இந்நிலையில் ஆன்மா வியாபக



விளக்கமாய்ப் பிரகாசிக்கும். இந்நிலையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய அவஸ்தாத்திரயத்துக்கு ஆதாரபீடமாய்த் திகழ்கின்றது. இதுவே ஆன்மாவின் உண்மை நிலையாகும்.

எதனுலும் பாதிக்கப்படாத, எப்பொழுதும் எவ்விதமான மாறுதலும் ஏற்படாத இந்தச் சாட்சிசொரூப துரியத்தின் முன்னிலையிலேதான் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தியாகிய இம்மூன்றுந் தோன்றித் தோன்றி மறைகின்றன. இத்தகைய தோற்றங்களையும் மாற்றங்களையும் துரியநிலையாகிய ஆன்மாவே அறிகிறது. அங்ஙனம் அறியப்பட்ட மூன்றவஸ்தைகளையும் மாற்றங்களையும் நாம் அல்லவென்றும், நாமோ உணர் வொளி நிறைவாய் நிற்கும் வியாபகப்பொருளென்றும் ஞான சாதகன் சாதனை செய்துவந்தால் துரியநிலை வாய்க்கும். சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் ஆகிய நிலைகளைப்பற்றிப் பின்வரும் நேரிசை வெண்பா தெளிவாகக் கூறுகிறது:-

நனவில் தசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போம்
கனவில் மனக்கூத்துங் காண்போம்—நினைவில்
சுழுத்தியிலே இல்லாத சூனியக் கூத்தாடி
விழுப்பொருளா நாமிருப்போ மே.

குறிப்பு:- நனவில்—சாக்கிரத்தில்

நனவில் தசேந்திரியநாட்டியங்கள் பார்ப்போம்- அநுதினமும் சாக்கிரத்தில் பத்து இந்திரியங்களுடைய நடனங்களை நாம் பார்ப்போம். தசம் என்பது பத்து. தசேந்தியங்களாவன ஞானேந்திரியங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஐந்தும். கனவில் மனக்கூத்துங் காண்போம்-சொப்பனத்தில் மனத்தினுடைய சாயா சொரூபமான கூத்தையுங் காண்போம். நினைவில்—நினைவில்லாத. நினைவில் சுழுத்தியிலே — நினைவு சற்றுந் தோன்றாத சுழுத்தியவஸ்தையில். இல்லாத சூனியக்கூத்தாடி—தோற்றங்கள் சற்றும் இல்லாத பாழாகிய கூத்தை நாம் ஆடி. விழுப்பொருளா நாமிருப்போம்—மேலான பொருளாக; அஃதாவது சாட்சிசொரூபமாக நாம் இருப்போம்.

விழுப்பொருளாக இருக்கும் நிலையே துரிய நிலை. சுயஞ்சோதியாகிய இந்நிலை வாய்க்கப்பெறின் மனத்தினது சேட்டைகள் தலைகாட்டா. இரவு பகலற்ற நிலையென்பதுவும் இத்துரிய நிலையே. சாக்கிரஞ் சொப்பனம் ஆகிய இரு அவஸ்தைகளையுஞ் சேர்த்துப் பகலென்பர். பாழாகிய சுழுத்தியை இராவென்பர். இத்துரிய நிலையில் அருவமனங் கரைவதினால் உண்டாவது சிவானந்தம். ''கங்குல் பகலற்ற வெள்ளவெளிக் கடல்மூழ்கி யின்பமயப்பொருளாய்'' விளங்குவது இச்சிவானந்தமே.



## பாசஞானமும் பசுஞானமும்

சிவஞானத்தை அடைவதன்முன் பாசஞானம் பசுஞானம் ஆகிய இரண்டையும் அறிந்து அவற்றை உண்மை ஞானமல்லவென்று விலக்கவேண்டும். அங்ஙனம் விலக்காவிட்டால் சிவஞானமல்லாததை யெல்லாம் சிவஞானமென நம்பி அல்லலுறுவோம்.

சுட்டியறியப்படுந் தேகாதிப்பிரபஞ்சத்தையும் அதன் இரகசியங்களையும் உண்மை யெனக்கொண்டு விவகரித்தலால் ஏறபடும் ஞானம் பாசஞானமெனப்படும்; அஃதாவது சொற்பிரபஞ்சமும் பொருட்பிரபஞ்சமுமாகிய இருவகைப் பிரபஞ்சங்களின் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஏகதேசஞானம். சொற்பிரபஞ்சமாவது வைகரி முதலிய நால்வகை வாக்குகள், அசபா மந்திரம் முதலிய மந்திரங்கள், வேதாகம சாஸ்திரங்கள், தற்கால பூத பௌதிக விஞ்ஞான சாஸ்திரங்கள் முதலியன. பிரபஞ்சம் சொற்பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சமென இருவகைத்தாம். மந்திரம், பதம், வன்னம் ஆகிய மூன்றும் சொற்பிரபஞ்சமாம். கலை, தத்துவம், புவனம் ஆகிய மூன்றும் பொருட்பிரபஞ்சமாம். இவற்றால் வரும் ஞானம் அனைத்தும் பாச ஞானமாம்.

பாசஞானத்தினலும் பசுஞானத்தினலும் சிவஞானம் ஏற்படாது; நம் பந்தம் நிவிர்த்தியாகாது. தற்காலத்தில் பௌதிக விஞ்ஞானிகள் சடப்பொருட்களை ஆராய்ந்து வருகிறார்கள், அவர்களுடைய ஆராய்ச்சி அந்நியத்தையே ஆராய்கிறது, அவர்களுடைய மனம் சடமயமாகவே நிற்கிறது. இது பாசஞானத்தைச் சார்ந்தது; மெய்ஞ்ஞானமாகாது. அந்நியத்தை ஆராயும் அறிவு எதுவென அவர்கள் ஆராய்வதில்லை; தன்னைவிட்டு ஆராய்கிறார்கள். சடப்பொருளை ஆராய்வது நம் அறிவு; நம் அறிவைச் சடப்பொருள் அறியாது, சடப்பொருளை அறிந்து கொண்டு விவகரிக்கும் அறிவு சடமயமாகவே திகழும். அந்தர்முக நாட்டம் எங்ஙனம் உண்டாகும்? அந்தர்முக நாட்டமில்லாவிடில் தன்னை அறியாவுணர்வு எங்ஙனம் சிவத்தை உணர முடியும். பின்வரும் நேரிசை வெண்பா இதனையெடுத்துக் கூறுகிறது.

தன்னை யறியார் தலைவனையுந் தானறியார்
பின்னையவர் ஞானம் பிதற்றலே—அன்னவரைச்
சாராது சற்குருவைச் சார்ந்துய்யத் தெய்வமே
பாராய் அருட்கண் பதித்து

தேகாதிதத்துவங்களை நானென்று அல்லது எனதென்று அபிமானித்தலால் ஆன்மாவின்கண் ஏற்படும் ஞானம் பசுஞானமெனப்படும்; அஃதாவது தேகாதி



தத்துவங்களின் தருமத்தை அல்லது குணத்தை ஆன்மாவின் கண் ஏற்றி விவகரித்தலால் உண்டாகும் ஞானம். இதைச் சீவஅறிவு அல்லது சீவபோதம் என்றுஞ் சொல்வர். கர்த்தா போக்தாத் தன்மை பசுஞானத்துக்கே உரியது. ''கர்த்தனுஞ் சீவபோதம் ஒழிவதே துக்கம் போதல்'' என்பது சான்றோர் வாக்கு.

நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் உயர்ந்தசாதி, நான் தாழ்ந்தசாதி, நான் பிரமச்சாரி, நான் கிருகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண் பிள்ளை, நான் பெண்பிள்ளை, நான் அரசன், நான் பிரசை, நான் மூடன், நான் விவேகி, நான் அரசியல் ஞானமுடையவன், இலங்கை என் தாய்நாடு, இந்தியா என் தாய்நாடு இவை போன்ற பிறவும் பசுஞானத்தைச் சேர்ந்தன. பசுஞானம் பாசஞானம் இரண்டும் அஞ்ஞானத்தின் காரியங்களாம். மெய்ஞ்ஞானமல்லாததையெல்லாம் மெய்ஞ்ஞானமெனக் கருதி அனேகர் மயங்குகிறார்கள். பின்வருவனவும் அஞ்ஞானத்தின் காரியங்களாம்.

(1) அநாத்மாவாகிய தேகாதிகளில் ஆத்ம புத்தி; அஃதாவது தேகாதிகளை ஆன்மாவென நினைத்தல்.
(2) அநித்தியமான பிரபஞ்சத்தில் நித்திய புத்தி;

அஃதாவது நிலையற்ற பிரபஞ்சத்தை நிலையுடையதென நினைத்தல்: அழிந்து போகுந் தேகத்தை அழியாதென நினைத்தல்.

(3) துக்கரூபமான தனுதிகளிற் சுகபுத்தி; அஃதாவது முன்னிலைப் பொருட்களாகிய மண், பெண், பொன் முதலியவற்றில் சுகம் இருப்பதாக மயங்கி நினைத்தல்.

(4) அசுசியானவற்றில் சுசிபுத்தி; அஃதாவது அசுசியானசரீரம், ஸ்திரீ, பிள்ளைகள் முதலியவற்றைச் சுசியென நினைத்து முத்தமிடல் போன்ற பலவுமாம். மேற்கூறிய அனைத்தும் அஞ்ஞானத்தையே விருத்தி பண்ணும். மெய்ஞ்ஞானத்துக்குப் பெருந்தடை.

பின்வரும் நேரிசை வெண்பாக்கள் மெய்ஞ்ஞானமல்லாதவற்றை மெய்ஞ்ஞானமென்று அறியாமையால் பலர் நம்புவதை எடுத்துக்கூறுகின்றன.

சோதிடமும் வைத்தியமுஞ் சொல்லுமிகு மந்திரமும்
பேதிக்குஞ் சன்னதமும் பேயாட்டும்—ஆதியருள்
ஞானமென நம்புதல் தப்பாகும் நம்பாமல்
ஊனமெனக் காண்போம் உணர்ந்து.



ஊனமிகு ஆவி யுலகின் கதைதன்னை
ஞானமென நம்பிவிடல் நாசங்காண்—ஞானமிகு
சற்குருவைச் சார்ந்துய்யத் தற்பரனைப் பக்தியாற்
பற்றிநில் நெஞ்சே பணிந்து.

தேவதையைப் பூசைபண்ணிச் செய்யுநற் சித்திகளும்
ஓவலறும் யோகமுறைச் சித்திகளும்—பாவனைசெய்
மாலதனை மாய்க்கும் பரஞான மாகுமோ
சீலமுற வாய்தல் சிறப்பு.

குறிப்பு:-

பேதிக்குஞ் சன்னதமும், பேயாட்டும்—புத்தியை மாறுபடச் செய்யும் ஆவேசமும், பசாசுபிடித்தாடுதலும். ஆதியருள் ஞானமென—பரஞானமென (பதிஞானமென); நம்புதல் தப்பாகும்—நம்புதல் விசாரணையில்லாததினுல் உண்டாகும் பிழையாகும். ஊனமெனக் காண்போம் உணர்ந்து — பரஞானமெனச் சொல்வது வெறுந்தப்பென அநுபவரீதியில் காண்போம். (ஊனம்—குறைவு, இழிவு) ஆவியுலகு—இறந்தபின் உயிர்கள் இருக்கும் உலகு. தற்காலத்தில் இறந்தவர்களுடன் பேசுகிறோமென்று கட்டைதள்ளிக்கூறும் விபரீதமான கதைகளை மெய்யென நம்பி அனேகர் மதிமயங்குகிறார்கள். இத்தகைய கதைகள் உள்ள பக்தியையுங் கெடுத்து அதோகதியிற் சேர்க்கும்.

ஓவலறும் — வருந்துதலை ஒழிக்கும். மாலதனை மாய்க்கும் பரஞானமாகுமோ ? — மயக்கத்தை நிவிர்த்தி செய்யும் சிவஞானமாகுமோ ? இல்லையென்றபடி. சீலமுறவாய்தல் சிறப்பு—ஆதலால் ஞானவிசாரணையை ஒழுக்கமுறச் செய்தல் மிகவும் நன்று.

## ஆன்மா

தானல்லாத தேகத்தைத் தானாகவும், தனதல்லா தவற்றைத் தனதாகவும் எண்ணி (நானென்றும், எனதென்றும்) அபிமானிக்கும் உணர்வைச் சைவசித்தாந்த சாஸ்திரங்களில் ஆன்மாவென்று கூறுவர். அங்ஙனம் அபிமானிக்கும் உணர்விற்கே பந்தம். ஆனால் வேதாந்த சாஸ்திரங்களில் அங்ஙனம் அபிமானிக்கும் உணர்வைச் சீவனென்று கூறுவர்.

தத்துவ விசாரணையினால் அபிமானமற்றுத் தேகாதி தத்துவங்களுக்கு வேறாய்ச் சுயம்பிரகாசமாய் விளங்கும் உணர்வைச் சைவசித்தாந்த சாஸ்திரங்களில் அருள் அல்லது சுத்த அறிவென்று கூறுவர். அத்தகைய உணர்வை வேதாந்த சாஸ்திரங்களில் ஆன்மா அல்லது கூடஸ்தன் என்று கூறுவர். கூடஸ்தனெனினும் சீவசாட்சியெனினும் ஒக்கும்.

ஆன்மாவென்னுஞ் சொல்லுக்குச் சைவசித்தாந்த சாஸ்திரங்களில் ஓர் அர்த்தம் (பந்தமுடையது); ஆனால் வேதாந்த சாஸ்திரங்களில் இதற்கு மாறான வேறோர் அர்த்தம் (பந்தமில்லாதது).



இத்தகைய சொற்களின் பேதங்களை ஞானசாஸ்திரங்களைப்படிக்கும் அதிகாரிகளும் அன்பர்களும் நன்கறிதல் வேண்டும். அங்ஙனம் அறியாது போனால் அன்னாரது விளக்கம் சொல்வாதமாகவும் குழறுபடியாகவும் முடியும். சொல்மயக்கத்தினால் தர்க்கமும் துவேஷமும் உண்டாகும். இது ஞானானுபூதிக்குப் பெரிய தடை.

சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலும்
அல்ல லொழிவ தென்றைக் கையா பராபரமே

என்பது தாயுமான சுவாமிகள் அருள்வாக்கு.

ஞான சற்குரு முன்னிலையில் தத்துவ விசாரஞ் செய்து, அதன்பின்னர் சாதனை மேலீட்டினால் அறியாமை நீங்கிய விடத்து உணர்வு தன்னைச் சுயம்பிரகாசமாகவும் வியாபக வடிவாகவுங் காணும். இத்தகைய நிலையையே ஆன்மாவென்னல் நன்கு. தன்னை அறிதல் என்னும் வாக்கியத்தின் கருத்தும் இதுவே. இதுவே ஞானாகாசம். சிவானந்தம் விளைதற்கு ஏதுவாகிய இடம்.

மேலே கூறப்பட்ட கருத்துக்களை தாயுமான சுவாமிகள் பின்வருங் கவிகளால் நமக்கு அறிவுறுத்துகிறார்.

பாராதி பூதநீ யல்லே—உன்னிப்
பாரிந்திரியங் கரண நீயல்லே
ஆராயுணர்வு நீயென்ருன்—ஐயன்
அன்பா யுரைத்தசொல் லானந்தந் தோழி
—சங்கர! சங்கர! சம்பு!

அன்பருக் கன்பான மெய்யன்—ஐயன்
ஆனந்த மோனன் அருட்குரு நாதன்
தன்பாதஞ் சென்னியில் வைத்தான்—என்னைத்
தானறிந்தேன் மனந்தானிறந்தேனே
—சங்கர! சங்கர! சம்பு!

குறிப்பு:- என்னைத் தானறிந்தேன்—ஆன்மாவாகிய என்னைச் சுயம் பிரகாசமாகவும், வியாபக வடிவாகவும் அறிந்தேன். தத்துவங்களை நேதிகளைந்தவிடத்து ஆன்மாவின் நிஜசொரூபம் எத்தகையதெனப் பின்வருங்கவி விளக்குகிறது.

சத்தொடு சித்தானந்தஞ் சமந்திரஞ் சாக்ஷி யேகம்
நித்தியம் வியாபி யான்மா நீயது வாவறிந்து
பொத்தொடு சடந்துக் காதி பொருந்து பேதங்களான
குத்திரப் பஞ்சகோசக் குகைவிட்டு வெளியி லாவாய்
(கைவல்லிய நவநீதம்)

உரை:- சத்து, சித்து, ஆனந்தம், சமம், திரம், சாக்ஷி, ஏகம், நித்தியம், வியாபியெனப்படுவன ஆன்மாவின் நிஜசொரூபம். ஆதலால் நீ அந்த ஆன்மாவென உன்னை நீ அறிந்து அசத்து, சடம், துக்கம் முதலியவைகளை தமக்கியல்பாகவுடைய பேதப் பொருள்களாய் நின்றுள்ள பஞ்சகோசமென்னும் வஞ்சகக் குகைகளினின்று வெளிப்படுதி.



குறிப்பு:-

சத்து—என்றும் உள்ளது. சித்து—இங்கே தன்னை அறிவது. ஆனந்தம்—மாருச் சுகம். சமம்—எங்கும் என்றும் மாருது ஒரு படித்தாய் நிற்பது. திரம்—இப்படி நிற்றற்கு மாறின்மை. சாட்சி—அதுவதுவாகியும் ஆகாது அவற்றை விலக்ஷணமாக நின்றுணர்தல். ஏகம்—பலவாகியும் ஆகாது தனியாய் நிற்றல். நித்தியம்—இங்ஙனம் நிற்றல் ஒருபோதன்றெனல். வியாபி—வியாபகத்துக்கெல்லாம் வியாபகமாய் நிற்பது.

அறிவுக்கு அயல் பஞ்சகோசங்கள். பஞ்சகோசங்கள் அசத்து, சடம், துக்கம், கண்டம், அநித்தியம் முதலிய தன்மைகளை உடையன.

அவித்தையாகிய காரண சரீரம் நீங்கிய விடத்து துரியநிலை தானுகவே விளங்கும். காரண சரீரத்தைக் களைவதற்கு நாம் செய்ய வேண்டிய சாதனத்தைப் பற்றிப் பின்வருங் கவிகூறுகிறது:—

காரண சரீரந் தன்னைக் களைவதெவ்
வாறென் ருேதில்
ஆரணம்பொய் சொல்லாதே யதன் பொருள்
அகத்தி லுன்னிற்
பூரண மாகு மென்மேற் புவனங்கள்
தோற்று மென்னுந்
தாரணை வந்த தாகிற் றரித்திடும்
அவித்தை யெங்கே
(கைவல்லிய நவநீதம்)

குறிப்பு:-

காரண சரீரம்—தன்னைமறந்த மறதியாகிய அறியாமை. இதை அவித்தையென்பர். தூலதேகத்திற்கும் சூக்கும தேகத்திற்கும் காரணமாயிருப்பதால் அவித்தையை (அஞ்ஞானத்தை)க் காரணசரீரமென்பர். அவித்தை நீங்கியவிடத்து ஆன்மா தானாகவே பிரகாசிக்கிறது.

காரணசரீரத்தை வேரோடு களையுமாறெங்ஙனமெனக் கேட்பையாயின் வேதம் பொய் சொல்லாது. ஆதலின் அதனது மகாவாக்கியார்த்தத்தை நினைந்து, எனது நிஜ சொரூபமாகிய பூரண வியாபகத்தில் தோற்றும் உலகங்களனைத்தும் வெறும் பொய்யென்னுந் திடசிந்தை அகண்டபாவனையால் வருமாகில் அறியாமையாகிய காரணசரீரம் எங்ஙனம் சிதைந்தொழியாது நிற்கும். நில்லாதென்க. பூரணமாகுமென்மேற் புவனங்கள் தோற்றுமென்னுந் தாரணை வந்ததாகில் தரித்திடும் அவித்தையெங்கே யெனக் கூறியதில் யாது நயமென்னின், யாதுஞ் சுயம்பன்றெனத் தெளிந்தவாறு கலங்காது நிற்கின், அப்பிலுப்பென அனைத்துங் கரைந்து சின்மாத்திரமாகும், அங்ஙனம் ஆதலே நயமெனவுணர்க. மேலும் சீவசாட்சியைப் பற்றி விபரமாக பின்வருங்கவி விளக்குகிறது.



தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமூன்
றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங்
கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனதெத்
தனையென் பேனுன்
ஆலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ்
சாக்ஷி நீயே

(கைவல்லிய நவநீதம்)

உரை-:

தூலம், சூக்குமம், காரணம் என்னும் இம்மூன்று தேகங்களும், இவை காணப்படுதற்கு இடமாயுள்ள சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்று அவஸ்தைகளும், இவற்றிற்குக் காலவரையறையா நின்றுள்ள சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் முக்காலங்களும் ஆகிய இவைகள் பிறவி சாகரத்திலே தானே யெழுந்தடங்குதலை இயல்பாகவுடைய பேரலைகளைப் போலவே தோன்றித் தோன்றி அழிந்ததாகிய தொகை எத்தனையெனக் கணக்கிடுவன்யான்? முன்னர்ச் சனகனாதி முனிவோர்களுக்கு அநுக்கிரகிக்கக் கல்லாலவிருக்ஷத்தின் கீழ்க் குருமூர்த்தமாய் எழுந்தருளிய பரமசிவத்தின்மேல் ஆணைப்படி உன்னால் அறியப்படும் அந்தத் திருசியங்களனைத்திற்குஞ் சாக்ஷியாய் நின்றுள்ளது நீயே வேறில்லை. ஆதலால் நீயிதனை அநுபவித்துக் காணுதி. (கல்லோலங்கள்—பெரிய அலைகள்)

## தியானம்

தியானஞ் செய்வதின் முக்கிய நோக்கம் சீவசாட்சியை ஐயமற அறிந்து சிவசொரூபமயமாவதற்கே. சாதகனது இலட்சிய வடிவமாகிய சித்தவிருத்தியின் பிரவாகம் (பெருக்கு) தியானமாம். தியானத்தின் கர்த்தா (தியானஞ் செய்பவன்) தியாதாவாம். தியான விஷயம் (இலட்சியவடிவம்) தியேயமாம்.

(1) தியாதா—தியானிக்கிறவன்.
(2) தியானம்—தியானிக்கப்படும் பொருள்வடிவாக நிற்கும் சித்தத்தின் பிரவாகம்.
(3) தியேயம்—தியானிக்கப்படும் பொருள் (தியான விஷயம்).

அனேகர் தியானஞ்செய்ய நேரமில்லை நேரமில்லை யென்று நேரத்திற் பழியைச் சுமத்துகிறார்கள். நேரம் காசு கொடுத்து வாங்கக்கூடிய ஒரு பொருளா? ஒரு நாளில் 24 மணித்தியாலங்கள் உண்டு. உலக விஷயத்திற்காக 23 மணித்தியாலங்களை ஒதுக்கினாலும் எஞ்சிய ஒரு மணித்தியாலத்தில் அரை மணி நேரத்தையாவது தன்னுடைய ஆத்மீக முன்னேற்றத்திற்குஞ் சாதனைக்கும் ஒதுக்கக்கூடாதா? விஷய வாசனையுள்ள மனத்திற்கு, அஃதாவது சாத்வீக சம்பந்தமற்ற மனத்திற்கு,



ஆத்மீக சாதனைகள் நஞ்சுபோற்றோன்றும். இதுவே உண்மையான காரணம். தாயுமான சுவாமிகள் இதைப்பற்றிப் பின்வருங் கவியால் விளக்குகிறார்.

யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதுநான் நானெனக் குளறியே
ஒன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(பரிபூரணானந்தம் - 10)

தியானபேதங்களும், முறைகளும், அவற்றால் வரும் பயன்களும் பலவகைப்படும். இவையனைத்தையும் ஆன்ம சாட்சாத்காரத்தின் பொருட்டு மூவகையாக ஆன்றோர் வகுத்திருக்கிறார்கள். அவையாவன:-

(1) உருவத்தியானம் (2) அருவத்தியானம்
(3) சொரூபத்தியானம்.

நற்குண நற்செய்கைகளுடன் முறைப்படி தனது இஷ்ட தெய்வத்தை நாமரூபத்துடன் தியானித்தல் உருவத்தியான மெனப்படும். இத்தியானத்தால் அந்தக் கரண சுத்தியேற்படும். அந்தக்கரண சுத்தி ஏற்படா விட்டால் மனம் உலகவாசனையாற் சுழன்று கொண்டே திரியும். உலகவாசனையை நீக்கி ஈசுவரகடாட்சம் பெறுவ தற்கு இதுவோர் அரிய சாதனை. இத்தியானத்தை உபாசனையென்றும், பாவயோக மென்றுங் கூறுவர்.

உருவத்தியானத்திற்கு மேலானது அருவத்தியானம் நாமரூபமனைத்திற்கும் ஆதாரமாய் விளங்குவது அருவ மென்றும் அது எங்கும் என்றும் நிறைந்திருக்கும் பொரு ளென்றும், தியானித்தல். இதை அபாவயோக மென்றுங் கூறுவர். இது நிதித்தியாசனத்திற்கு (மனம் தெளிதற்கு) உதவி புரியும். சங்கற்பத்தைத் தவிரச் சகமின் றெனத் தெளிதல் நிதித்தியாசன மென்பர். ''சித்தம் ஏகாந்த மான தரிசனந் தெளிதலென்பார்'' என்பது அறிஞர் வாக்கு. அருவத்தியானங் கைகூடியவர்களுக்குச் சொரூ பத்தியானம் எளிதிற் சித்திக்கும்.

ஆன்மாவின் நிஜசொரூபத்தை அறிந்து அதுவே எங்கும் நிறைந்திருக்கும் சுயம்பிரகாச மெனத்தியா னித்தல் சொரூபத் தியானமாகும். இத்தியானத்தால்



அகண்ட நிலை எத்தகைய தெனவிளங்கும். இது சிவ ஞானத்தைக் கொடுக்கும். சிவஞானமொன்றே பவபந் தத்தை அறவே ஒழிக்கும். சிவஞானம் மேலோங்கில் பாசஞானம் பசுஞானம் ஆகியவிரண்டுந் தலைகாட்டா.

## சிவஞானமும் அநுபூதிநிலையும்

சிவஞானமெனினும், பதிஞானமெனினும், பரஞான மெனினும், திருவடி ஞான மெனினும், பிரஹ்மஞான மெனினும் ஒக்கும்.

சிவம்(பேரின்ப நிலை) சத்துவகுண மனத்திற்கு விஷய மாவதன்றி, தாமதகுண இராசதகுண மனத்திற்கு விஷய மாவதின்று. (1) சத்துவ குணம் பிரகாச வடிவமாகவும் (2) இராசத குணம் பிரவிர்த்தி வடிவமாகவும் (3) தாமத குணம் மோகவடிவமாகவும் இருப்பனவாம்.

அசுத்தமனம் தாமதகுண மிக்கபோது அஞ்ஞான மயமான மூடவிருத்தியுடைய தாகவும், இராசத குணம் மிக்கபோது இராகத்துவேஷமயமான கோர விருத்தி யுடையதாகவும் இருப்பதாம். சரியை, கிரியை, யோக மென்பவற்றை முறையாக மேற்கொண் டொழுகுவோரி டத்துத் தாமத இராசதமாகிய இருகுணங்களும் அடங்கி நிற்க, சத்துவகுணம் பிரகாசவடிவமாக மனத்தில் மேம் பட்டு நிற்பதாம். இங்ஙனம் மேம்பட்டு நிற்கும் மனத்

திலே பற்றில்லாத சாந்தவிருத்தி உண்டாவதாம். இத்தகைய மனத்தையுடைய அதிகாரி தன்னிற் சிவத்தை அபேதமாக அறிவதற்கு அவனது சாந்த விருத்தியே சாதனமாயிருக்கிறது.

சிவசொரூபமாய் விளங்குந் தேசிக மூர்த்தி எல்லா மாய் அல்லதுமாய் விளங்குந் திருவடியதனை இருந்தபடி யிருந்து காட்டப் பரிபக்குவமுடைய சீடனும் அங்ஙனம் இருந்து மோன நிலையை உணர்ந்து மோன நிலையில் வாழ்கிறான்.

அகண்டார்த்த சொரூபத்தில் கருத்தைப் பதித்தலே அநுபூதி வழியென்று அறிந்தோர் அனவரது ஏகசித் தாந்தம். சுத்த சைதன்னியமோ உபாதி எதுவுமற்ற அகண்டம். விசாரணையின் முடிவாய் அது விளங்கும். அகண்டத்தில் நிலை பெறலே தனியேயிருத்தல். ஞான சொரூபமாய் விளங்குந் தனக்கயல் எதுவுமேயில்லை யென்னுந்துணிபு வேண்டும். அங்ஙனம் அமைந் திருத் தலால் விளையும் ஆனந்தம் சிவானந்தம் அல்லது சச்சி தானந்த மென்பர் அநுபூதி பெற்ற மகான்கள். சச்சி தானந்த சிவ சொரூபம் ஆன்மாவின் நிஜ சொரூப மாகிய அகண்டார்த்த சொரூபத்திற்கு அன்னியமல்ல. அதுவே என்று முள்ளது; எங்கு முள்ளது; எவற்றிலு முள்ளது.



வியட்டி தேகாதி தத்துவங்களை நேதிகளைந்து ஆன்ம ஞானம் உண்டாயினும் மாயாப் பிரபஞ்சம் சத்திய மென்னும் (உண்மையென்னும்) புத்தி சாதகனுக்கு நீங்கு வதின்றாம். அச்சத்திய புத்தி நீங்குவதன் பொருட்டு ஞான சற்குருவினது கிருபையால் பரவெளியை அறிதல் வேண்டும். அங்ஙனம் அறிந்து அப்பரவெளியில் சித்தம் நேரே நிற்றலைச் சிவஞான நிட்டையென்பர். பலகால நேரமும் நேரே நிற்க நிற்க எங்குமாய் நிறைந்துள்ள சிற் சோதியானது அங்ஙனம் அசையாது நின்றுள்ள சித்தத் தின்கண் இருளில் மின்மினி போலவும், சுடர் போலவும், வளர்பிறை வரிசை போலவும், சூரியோதயம் போலவும், கணக்கின்றிய சூரியர் போலவும், உபாதிரகிதப் பிர காசம் போலவும் தனதமிசம் பிரதிபலிக்கும். அங்ஙனம் சிற்சோதியானது பிரதி பலித்த விடத்து உலகமாகிய மாயாப் பிரபஞ்சம் இந்திர சாலம் போலவும், கனவு போலவும், கானற்சலம் போலவும் மித்தையாய் ஒழி வதாம். விசாரணைக்குமுன் உண்மையாகவும் விசாரணைக் குப்பின் பொய்யாகவும் எது தோற்றுகின்றதோ அது மித்தையெனப்படும். இதைப்பற்றிப் பின்வருமாறு பட்டணத்துப் பிள்ளையார் கூறுகிறார் :-

மையொடு கண்ணியும் மைந்தரும்
வாழ்வும் மனையுஞ் செந்தீ
யையா நின்மாயை யுருவெளித்
தோற்ற மகிலத் துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல
நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்க தையாய்க்
கனவாய் மெல்லப் போனதுவே.

இங்ஙனம் உலகம் மித்தையாய்த் தோற்றுவதினால் சிவஞான நிட்டை வலுவடைந்து சிவாநுபூதி உண்டாகிறது.

ஆன்மாவாகிய தன்னை யறிந்து சிவாநு பூதியை அடைதற்குச் சிறந்த சாதனை முறைகளைப் பின் வருங் குறள்களால் ஔவைப்பிராட்டி கூறுகிறார்.

(1) மாதூ வெளியின் மனமொன்ற வைத்தபின்
போதக மாகும் உடம்பு.

குறிப்பு:-

பெரிய பரிசுத்தமான ஆகாயத்தின்கண் மனசைப்பதிய வைத்துச்சாதனை செய்வதினால் சிற்பிரகாசம் உதயமாகும். அதனால் அவித்தையெனப்படும் காரண சரீரம் நீங்கிச் சமஸ்தமும் ஞானமயமாய் விளங்கும். உடம்பு இங்கே காரண சரீரத்தைக் குறிக்கிறது.



(2) இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்கு
அமையாத வானந்த மாம்.

(3) மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரிறவார் பினை.

குறிப்பு:-

இமையாத நாட்டம் — சுட்டிப்பாராத பார்வை.
அமையாதஆனந்தம் — பொருந்துதற் கருமையான பேரானந்தம்.
மறவா நினையா மவுனம் — கேவல சகலங்கள் நீங்கிய துரியநிலை.

மேற் கூறிய கருத்துக்களை மிகவும் விரிவான முறையில் பின்வருங் கவிகளால் விளக்குகிறார் ஈசூர் ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள்.

உள்ளும் புறம்பும் ஒழியா வெளியன்றி ஒன்றுமில்லை.
உள்ளும் புறம்பெனச் சொல்லாத தெப்பொருள் ஒன்றுமில்லை.
உள்ளும் புறம்பெனச் சொல்லல் வெளிபற்றி யோர்ந்திலமோ
உள்ளும் புறம்பும் வெளிநாட்டங் கொண்டுய்ம்மின் உத்தமரே.

குறிப்பு:-

எப்பொருளையும் ஆராய்ந்து பார்த்தால் முடிவில்லாத ஆகாயமே உள்ளும் புறம்பும் இருக்கிறது.
வெளிநாட்டம் — ஆகாயத்தைச் சுட்டாது பார்க்கும் பார்வை.

வேற்றுருவ மெல்லாம் வெளியதனிற் கற்பிதமே
வேற்றுருவ நோக்கால் விபரீதம் — நீத்து
வெளிநாட்ட மாகில் விபரீத மின்றி
எளிதிற் சுகநிலையா மிங்கு.

குறிப்பு :-

வேற்றுருவ மெல்லாம் — நம்மால் அறியப்படும் நாமரூப மனைத்தும் (ஆகாயத்தின்கண் கற்பிதமாகத் தோன்றுகின்றன). நாமரூபத்தை நாடிநோக்கும் நோக்கால் விபரீதம் விளைகின்றது. ஒன்றை மற்றொன்ருகவே நினைப்பது விபரீதம் என்பர்; அஃதாவது கட்டையைக் கள்ளனெனவும், கயிற்றைப் பாம்பெனவும் மயங்கி நினைப்பது.

"திரமறு சகமெய்யென்றுந் தேகநானென்று முள்ளே
விரவிய மோகந்தானே விபரீதமென்பர் மேலோர்"

(கைவல்லிய நவநீதம்)

வேற்றுருவ நோக்கை விட்டு வெளிநாட்ட மாகில் விபரீதம் நீங்கும். அங்ஙனம் நீங்குவதினுல் மனம் ஆகாயத்திற் கரைந்து சிற்பிரகாசம் உதயமாகி எளிதிற் சுகநிலையுண்டாகிறது.

வெளிநாட்டஞ் சிந்தனையு மீக்கொள்ளக் கொள்ள
வெளியுருவாஞ் சிந்தனையு மீளா — தொளிமயமாய்
நின்றுசிதா நந்தமதாய் நீங்காச் சுபாவமதாம்
என்றுஞ் சிவோக மிது.

குறிப்பு :-

மீக்கொள்ளக் கொள்ள — மேலோங்க மேலோங்க.
ஒளிமயமாய் நின்று — சிற்பிரகாசமாய் நின்று. சிற்பிரகாசத்தையே



திருவருளென்பர். சிற்பிரகாசத்தில் நாட்டம் சிதையாது நிற்றலைத் திருவருளில் நிற்றல் என்பர். இத்திருவருள் நாட்டத்தால் தேகாதிப்பிரபஞ்சம் மித்தையாகத்தோன்றிச் சிவானந்தம் விளைகிறது.
சிதாநந்தம் — அறிவானந்தம்.
நீங்காச் சுபாவமதாம் — (ஒருபொழுதும்) விட்டு நீங்காத தனது இருப்பாம். சுபாவம் — தனது இயல்பு அல்லது இருப்பு.
சிவோகம் (சிவ: + அகம்) — எங்கும் நிறைந்த சிவசொரூபம் நாஞகவிளங்குகிற தென்னும் பாவனை (சிவமே நான் என்னும் பாவனை).

அதுநானென் ருகு மனுபவமீ தூர
அதுநழுவி நானதுவா மப்பால் — எதுவுமல
தாகிமன வாக்குக் கடங்காது நிற்பதுதான்
ஆகுநிலை முத்திமுடி வாம்.

குறிப்பு :—

மீதூர — மேலோங்க
அது நான் — சிவோக பாவனையைக் குறிக்கிறது. இச்சிவோக பாவனையின் முதிர்ச்சியால் சிவசொரூபம் தாஞக விளங்கும் அநுபூதிநிலை யுண்டாகிறது.

ஔவைப் பிராட்டியார் பின் வரும் நேரிசை வெண்பாவால் நின்றநிலையைப் பற்றி விளக்குகிருர்.

நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்றும்
அன்றென்று மாமென்று மாகாதே — நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள்.

குறிப்பு:-

நின்ற நிலே — (மனசினுல் ஏற்படும் எவ்வித பாகுபாட்டையும் ஏற்காத நிலேயாதெனில்) பரிபூரணமாய் நிற்கும் நிலே.

தான் அது ஆம் தத்துவமாம் — ஆன்மாவாகிய தனது நிஜ சொரூபமே சிவசொரூபமாய் அநுபூதியில் விளங்கும் நிலேயே உண்மை நிலேயாகும். அஃதாவது ஆனந்தத்தைத் தேடினுல் அது ஒரு போதும் அடையப்படும் பொருளல்ல. தனது நிஜசொரூபத்தை யறிந்து அதிற் சிந்தையற நிற்றலே உபாயம். அங்ஙனம் சிந்தையற நிற்றலால் சிவானந்த வெள்ளம் பெருக்கெடுக்குமென்க. (யாக்கை — கயிறு)

இது நல்லதென்றும், இது தீயதென்றும், இது செய்தவன் நானென்றும், இது செய்தவன் அவனென்றும், இது பொருளல்ல வென்றும், இது பொருளா மெனவுங் கூறப்படுங் கற்பனே அனேத்தையுங் கடந்தது யாதெனிற் பரிபூரணமாய் நிற்கும் நிலே. (அப்படியாயின் அங்ஙனமாய் விளங்கும் நிலேயை அடைதற்கு வழியாதெனில்) ஆன்மாவாகிய தனது நிஜசொரூபமே அதுவாகின்ற உண்மை நிலேயாகும்.

சம்புப்புல்லே அறுத்தவர் அதனேக் கட்டுதற்குத் தேடும் பொருள் அந்தச் சம்புப்புல்லேயன்றி வேறு பொருள் இல்லே. அஃதாவது சம்புப்புல்லே அறுத்தவர் அதனேக்கட்டுதற்கு அச்சம்புப்புல்லேயே கயிருக முறுக்கிக் கட்டுவர். அதுபோல ஆன்மா தனது நிஜசொரூபத்தை



அறிந்து தனதிடத்திலேயே சிந்தையற நின்ருல் சிவானந்தம் விளேயும். ஆதலால் தேடும் பொருள் தன்னேயன்றி வேறில்லே.

தாயுமான சுவாமிகள் பின்வருஞ் செய்யுள்களால் மேற்கூறிய கருத்துக்களே ஸ்திரப்படுத்துகிருர் :-

தன்னே யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
உன்னே யறிதற் குபாயம் பராபரமே

குறிப்பு :-

தன்னே அறிந்து—ஆன்மாவாகிய தனது நிஜசொரூபத்தைச் சாதனேயாற் சந்தேகமற அறிந்து.

அருளே தாரகமாய் நிற்பதுவே — பின்னர்த் திருவருளே ஆதாரமாய் இருப்பதாகத் துணிந்து அத்திருவருளிற் சிந்தையற நிற்றலே,

உன்னே அறிதற் குபாயம்—பேரின்பமாய் விளங்குஞ் சிவசொரூபத்தை அநுபூதியால் அறிவதற்கு உபாயம்.

வெய்ய புவிபார்த்து விழித்திருந்த அல்லலறத்
துய்ய அருளில் துயிலுநாள் எந்நாளோ.

குறிப்பு:-

கொடிய மாயாகாரியமான உலகத்தைப் பொருளாகக் கொண்டு அதனது போகத்தில் வாழ்ந்து கொண்டிருத்தலால் உண்டாகும் துன்பம் நீங்கும் பொருட்டுத்

தூய திருவருளில் ஆனந்த நித்திரை செய்யும் நாள் எந்த நாளோ. (அருளில் துயிலல் — அருளில் தூங் குவதே அறிதுயிலெனவும், தூங்காது தூங்குவதெனவுங் கூறப்படும்)

பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனை நின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண் பராபரமே.

குறிப்பு:-

பொய்யுலக வாழ்க்கை — தேகத்தை நானென்றும் உலகத்தை மெய்யென்றும் வாழும் வாழ்க்கை. இத் தகைய வாழ்க்கையைப் புலைச்சேரியில் வாழும் வாழ்க்கை யென்கிறார். அருள் நாட்டத்திற் சிதையாது மனம் நிற்கில் அருள்மேலோங்கும்; அங்ஙனம் மேலோங்குவதி னால் தேகவாசனை உலகவாசனை யிரண்டும் நீங்கும். (வாதனையெனினும் வாசனையெனினும் ஒக்கும்)

ஓராமல், மந்திரமும் உன்னாமல், நம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநாள் எந்நாளோ.

குறிப்பு:-

ஓராமல் — ஆராயாமலும் (எதையும் மனத்தினால் பகுத்துப் பாராமலும்)



மந்திரமும் உன்னாமல் — எவ்வித மந்திரங்களையுஞ் செபிக்காமலும். மந்திரத்தைச் செபித்தவிடத்து அது மந்திரயோகமாகும். சிவஞானமாகாது.

பரனைப் பாராமல் பார்த்துப் பழகுதல் — பரவியா பகத்தைச் சுட்டிப்பாராது பார்த்துப் பழகுதல்.

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே

குறிப்பு:-

அந்தக்கரணங்களின் சேட்டை யற்றுச் சும்மா விருக்கும்நிலை வாய்த்தால் அந்நிலையே சுட்டற்ற பூரண மென்று எம்மால் அறியப்படுதற்கு எளிதாகுமோ?

அதுவென் றுன்னும் அதுவு மறநின்ற
முதிய ஞானிகள் மோனப் பொருளது
எதுவென் றெண்ணி யிறைஞ்சுவன் ஏழையேன்
மதியு ணின்றின்ப வாரி வழங்குமே

குறிப்பு:-

அதுவென்றெண்ணும் நினைவும் இல்லாமல் நின்ற அநுபூதி முதிர்ந்த சீவன்முத்தர்களுடைய மௌன நிலை அது வெனப்படும். அங்ஙனமாய பொருள் எது வென்று மதித்து இறைஞ்சுவேன்? எளியேனுடைய அறிவின்கண் ஆனந்தப் பெருக்குப் பெருகா நிற்கும்.

வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கட்டவை யாவும் பருகினை
ஓரிற் கண்டிடு மூமன் கனவென
யாருக் குஞ்சொல வாயிலை யையனே.

வாரிக் கொண்டு — கவர்ந்து கொண்டு.
ஓரில் — ஆராயுமிடத்து.
ஊமன் கண்டிடும் கனவென — ஊமன் காணும் கனவு போல (ஊமன் — ஊமை). யாருக்குஞ் சொல வாயிலை ஐயனே — யாருடனுஞ் சொல்லுதற்கு வாக்கில்லை இறைவனே!

சிவாநுபூதியைப் பற்றித் தாயுமான சுவாமிகளது மாணுக்கர் அருளையர் பின்வருமாறு கூறுகிறுர்:—

வாக்கான் மனத்தான் மதித்திட அரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்கம்
ஆதியாய் அறிவாய் அகண்டமாய் அகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம்
பரவெளி தன்னிற் பதிந்தவென் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளம்
சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை.



சிவஞானத்தின் இயல்பையும் பயனையும் பற்றிப் பின்வருமாறு சிவஞான சித்தியார் கூறுகிறது:-

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கந்
தருஞானம் போகஞா திருஞான ஞேயந்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞான மிவையெல்லாங் கடந்தசிவ ஞானம்
ஆதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்

(இதன் பொருள்)

(1) பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் — மேலாகிய வீடுபேற்றைத் தரும் மெய்ஞ்ஞானத்தாற் சிவத்தைத் தரிசித்தோர்

(2) பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் — சிவமொன்றனையே கண்டு கொண்டிருப்பர், ஏனைய பதார்த்தங்களைப் பொருளாகச் சிறிதுங் காண்பாரல்லர்

(3) பார்க்க வருஞானம் பல ஞானம் அஞ்ஞான விகற்பம் — அவற்றை மெய்ப்பொருளெனக்காண வரு

ஞானங்கள் பலவகை ஞானங்களாகும்; அஞ்ஞானத்தால் ஏற்பட்ட விகற்பஞானமாகும், (விகற்பம் — வேறுபாடு)

(4) வாச்சிய வாசக ஞானம் வயிந்தவத்தின் கலக்கந்தரு ஞானம் — சொற்பொருளாலும் சொல்லாலும் உண்டாகும் ஞானமாகும்; விந்துவிலே தோன்றி வைகரி முதலிய நால்வகை வாக்கைப் பற்றி நிகழுவதும் ஐயந்தருவதுமா யிருக்கும் ஞானமாகும்.

(5) போக (ஞானம்) ஞாதிரு ஞான ஞேயந் தங்கிய ஞானம் சங்கற்பனை ஞானமாகும்—விடயாநுபோகத்துடன் கூடிய ஞானமாகும், ஞாதுரு ஞான ஞேயங்களாகிய திரிபுடி பொருந்திய ஞானமாகும்; (இவையனைத்தும்) சங்கற்பத்தால் உண்டான ஞானமாகும்.

(6) திருஞானம் இவையெல்லாம் கடந்த சிவ ஞானம் — தலைமையாகிய பரஞானம் ஒன்றுமே இவையனைத்தையுங் கடந்த சிவஞானமாகும்;

(7) ஆதலால் சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்—ஆதலால் இதனைப்பெற்ற சீவன்முத்தர் சிவமொன்றையே மெய்ப்பொருளாகக்கண்டு சிவாநுபூதியில் திளைத்திருப்பர்.



குறிப்பு:-

(1) பதார்த்தங்கள் — சொற்களால் அறியப்படும் விடயங்கள் (நாமரூபங்கள்).

(2) பார்க்க வருஞானம் பல (வித) ஞானம்; அஞ்ஞான விகற்பம் — பொறிகளைக் கொண்டு பதார்த்தங்களை அறியும் ஞானம் சுட்டுணர்வினுல் வருவது. அது பலவிதமாக விருக்கும். அஞ்ஞானத்தால் ஏற்படும் விகற்பஞானம். இது அபரஞானத்தைச் சேர்ந்தது.

(3) வாச்சிய வாசக ஞானம் வயிந்தவத்தின் கலக்கந் தருஞானம் — சொல்லின் பொருளைக் கொண்டும் சொல்லைக் கொண்டும் பெறும் ஞானம் விந்துதத்துவத்தினின்று தோன்றி நால்வகை வாக்கைப் பற்றி நிகழ்வதாய் ஐயப்பாடு தருவதாய் உள்ள ஞானம். இதுவும் (இலட்சியார்த்தம் விளங்காததினுல் ஏற்படும்) அபரஞானம்.

(4) போக (ஞானம்) ஞாதிரு ஞான ஞேயங்கள் தங்கியஞானம்; சங்கற்ப ஞானமாகும்—போகாநுபவத்தில் உறுவதாகிய ஞானம் திரிபுடியுடன் கூடிய ஞானம். சங்கற்பத்தினுல் வருவது. இதுவும் அபரஞானத்தைச் சேர்ந்தது. ஞாதுரு, ஞானம், ஞேயம் ஆகிய மூன்றுந்

திரிபுடி எனப்படும். திரிபுடி என்பதன் பொருள் (தேங்காய்க்கு மூன்று கண்ணிருப்பது போல) மூன்று பக்கமுடைய தென்பதாம். அஃதாவது பரஸ் பரம் (ஒன்றற்கொன்று) சம்பந்தமுள்ள மூன்று பொருள்களாம்.

ஞாதுரு — காண்பான் (சீவன்)

ஞானம் — காட்சி (மனோவிருத்தி)

ஞேயம் — காட்சிப் பொருள் (மனோவிருத்தியினால் அறியப்படும் பொருள்.) இவை மூன்றும் ஒன்றற்கொன்று சம்பந்தமுள்ளன.

(5) திருஞானம் இவையெல்லாங் கடந்த சிவஞானம் — மேற்கூறப்பட்ட அபரஞானத்தைச் சேராத சிறப்புடைய ஞானம் சிவஞானமாகும். பாசஞானம் பசுஞானம் ஆகிய விரண்டையுங் கடந்தது.

## பிரதிபந்தங்கள்

ஞானாசாரியன்பாற் கேட்டவாறு நிட்டை கூடிச் சிந்தித்துத் தெளிவதனாற் சிவஞானம் உண்டாயினும், அதற்கு இடையூறுகப் பிரதிபந்தங்கள் (தடைகள்) உண்டு. அப்பிரதிபந்தங்களை ஆன்றோர் மூவகையாக வகுத்திருக்கிறார்கள், அவையாவன (1) பூதப்பிரதிபந்தம் (2) வர்த்தமானப் பிரதிபந்தம் (3) ஆகாமியப் பிரதிபந்தம்.



(1) குருமுகமாய் ஆத்மவிசாரஞ் செய்யு மிடத்து ஆத்மதரிசன மாகியும் தான்முன் அநுபவித்த வனிதாதி விடய சுகவாசனை தாக்குவதால் மனம் நிலைபெறாது கலங்குவது பூதப் பிரதிபந்த மெனப்படும்.
பூதம் —இறந்தகாலம்; பிரதிபந்தம் — தனக்கு வேறாக நின்று பந்திப்பது (கட்டுவது)

(2) அங்ஙனம் குருமுகமாய் விசாரித்த மெய்யுணர்வில், இப்போது (நிகழ்காலத்தில்) காணும் விஷயங்களில் இச்சையுண்டாவதால், மனம் நிலை பெறாது நிற்பது வர்த்தமானப் பிரதிபந்த மெனப்படும்.
(வர்த்தமானம் — நிகழ்காலம்)

(3) அங்ஙனம் குருமுகமாய் விசாரிக்கும் பொழுதே இன்னுஞ் சில பிறப்பெடுத்துப் பெரும் போகங்களை அநுபவித்தாலல்லது இச்சை விடா தென்னும் சங்கற்ப தோஷத்தால் மனம் நிலை பெறாது கலங்குவது ஆகாமியப் பிரதிபந்த மெனப்படும். மேல்வரும் விடயலாபங்களைக் கருதிநிற்பதனால் எதிர்காலத்தைக் குறிக்கிறது ஆகாமியம். (ஆகாமியம் — இனிவருவது)

மேற் கூறிய மூவகைப் பிரதிபந்தங்களைப் பற்றி வேதாந்த சூளாமணி பின்வருமாறு பகருகிறது.

பகர்ந்தவுயி ருண்மைவிலக் காகவரும் பூதப்
பதிபந்தம் வர்த்தமா னப்பதிபந் தம்பின்
நிகழ்ந்தவா காமியப் பதிபந்த முத்தி
நேயமொடு துறந்துகுரு பரனையறிந் தடைந்து
மகிழ்ந்துசவ ணாதிகமுற் றிடினுமுன் னுகர்ந்த
வனிதாதி விடயசுக வாதனையாற் றினமும்
புகுந்துமன நிலைகலக்கி யுயிருண்மை யுருமற்
போக்கியிட றனைப்பூதப் பதிபந்த மென்பர்.

உரை :-

முற்கூறிய ஆத்ம சாட்சாத்காரத்திற்கு விக்கினமாக வருகின்ற பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம் பின்பு விளங்கிய ஆகாமியப் பிரதிபந்தங்களெனப் பிரதிபந்தங்கள் மூன்றும். அவற்றுள் முமுட்சுத்துவத்துடன் இச்சைக்கு விஷயமான யாவற்றையும் விடுத்து, சற்குருவை இவர் நம்மை யிரட்சிக்கத் தக்கவரென்றறிந்து, சரணாகதியடைந்து, மனமுவந்து சிரவணாதித்திரயங்களை அடைந் திட்டாலும் முன்னனுபவித்த பெண் முதலிய விஷயங்களில் உண்டாகிய சிற்றின்ப வாசனையால் நாள் தோறும் அகத்திற் புகுந்து மனோ நிலையைக் குழம்பச் செய்து ஆத்மாவின் நிஜசொரூபத்தை அடையாவாறு நீங்கியிடுதலே பூதப்பிரதிபந்த மெனச் சத்துக்கள் உரைப்பார்கள்.



குறிப்பு:-

உயிருண்மை — ஆத்மசாட்சாத்காரம் (ஆத்மாவின் நிஜசொரூபத்தை நேரே தரிசித்தல்)
பதிபந்தம் — பிரதிபந்தம்

மடிவிடயா சத்தியபி மானமொடு குதர்க்கம்
மறுகிடுஞ்சிற் றினஞ்சேர்தல் சபலத்து வாதி
அடைதலின்மெய் தெரிந்துமுயி ருண்மையுரு தழித்தல்
அதுவாகும் வர்த்தமா னப்பதிபந் தங்காண்
விடலரிய சநநமின்னுஞ் சிலவடைந்தா லன்றி
விடாதுபிர மாதியுல கிச்சையெனுந் தோட
மொடுமருவி மறைப்பொருளை யுணர்ந்திடினும் ஆன்ம
வுண்மையுரு தழித்தலா காமபதி பந்தம்

உரை :-

சோம்பலும், விடயவிச்சையும், அபிமானமும், குதர்க்கமும், மனங்கலங்கற் கேதுவான (மாறுபாடுடைய) அறிவின்மையோர் கூட்டங்களைச் சேர்தலும், சஞ்சலத்தன்மை முதலிய குணங்களை அடைதலுமாகிய இவற்றால் உண்மையை அறிந்தும் ஆத்ம சாட்சாத்காரத்தை அடைய வொட்டாது கெடுக்கின்றதெதுவோ அதுவே வர்த்தமானப் பிரதிபந்தமாம்.

நீங்கு தற்கரிய பிறப்பை இன்னமுஞ் சில பெற்றுலல்லது, சத்தியலோக முதலியவற்றில் வைத்த இச்சை தனக்கு நீங்காதென்கின்ற தோஷத்துடன் சேர்ந்து வேதார்த்தத்தை அறிந்திருந்தாலும் ஆத்ம சாட்சாத்காரத்தை அடைய வொட்டாமற் கெடுப்பதெதுவோ அதுவே ஆகாமியப் பிரதிபந்தமாம்.

மேற் கூறிய பிரதிபந்தங்களுள் (1) பூதப் பிரதிபந்தம் உபரதியினுல் நீங்கும் (2) வர்த்தமானப் பிரதிபந்தம் வைராக்கியத்தினுல் நீங்கும் (3) ஆகாமியப் பிரதிபந்தம் குருமுகமாய் விசாரிக்கும் இடைவிடா ஞான விசாரணையினுல் நீங்கும்.

(1) உபரதியென்றுல் விடல்; அஃதாவது தேகாதி தத்துவங்களைப் பொய்யென்றுணர்ந்து விடய சிந்தனையின்றிச் சித்தம் நிச்சலமாயிருத்தலாம். உபரதிக்குக் காரணம் அட்டாங்க யோகமாம். உபரதியினுற் பூதப்பிரதிபந்தம் நீங்கும்.

(2) வைராக்கிய மென்றுற் பற்றின்மை; அஃதாவது வனிதாதி விஷயங்களை அநுபவிக்க வேண்டுமென்னும் இச்சையில்லாதிருத்தலாம். வைராக்கியத்திற்குக் காரணம் வனிதாதி விஷயசுகங்களில் நிலையாமை முதலாய தோஷங்களைக் காண்டலாம். இதை விடயங்களிற் காணும் தோஷதிருஷ்டி யென்பர். அங்ஙனமாய தோஷதிருஷ்டியால் அவற்றைக் கக்கின சோறு போலவும் மலம் போலவுந் திடமாகச் சிந்தித்து அவற்றைவிட்டு நீங்குவதாம். வனிதாதி விஷயங்களை ஏன் அநுபவியாது நீக்கி விட்டோமென்னும் எண்ணம் உண்டாகாதிருத்தலே வைராக்கியத்தின் காரியமென்றிசைப்பர் மேலோர். வைராக்கியத்தின் மேம்பாட்டால் வர்த்தமானப் பிரதிபந்தம் நீங்கும்.



(3) மெய்ஞ்ஞான விசாரணையென்றுல் தூல சூக்கும காரண தேகங்களில் இருக்கிற ஆன்மாவாகிய நான் என்பது யாது, சித்தெனலுஞ் சடமெனலும் யாவை, இவ்விரண்டும் ஒன்றுகச் சம்பந்தித்த சம்பந்தம் யாது, இனியிச் சம்பந்தம் உருததற்கு முறையாது என்று ஞானசற்குருவிடம் பணிவுடன் உசாவல்.

ஞானத்திற்குச் சிரவணம், மனனம், நிதித்தியாசனம், நிட்டை கூடல் ஆகிய நான்கும் காரணமாம். சிரவணமென்பது சற்குரு வாயிலாகத் தத்துவார்த்தங்களைக் கேட்டலாம். மனனமென்பது கேட்ட அர்த்தங்களைச் சிந்தித்தலாம். நிதித்தியாசன மென்பது அங்ஙனம்

சிந்தித்தலால் உதயமாகும் சித்தத்தின் தெளிவு; அஃதாவது சித்தம் ஏகாந்த நிலையைத் தரிசித்துத் தெளிதலாம். நிட்டை யென்பது அங்ஙனம் தெளிந்த நிலையில் நிற்றலாம்; அஃதாவது சிந்தையற நிற்றலாம். அஞ்ஞான காலத்தில் தேகந்தானாய் இருப்பதுபோல ஞான காலத்திற் சுத்தசிவமே தானாய் விளங்குவது மெய்ஞ்ஞானத்தின் எல்லையாம். மெய்ஞ்ஞானத்தினால் அநான்ம புத்தி நீங்கிச் சுவர்க்காதிபதம் மித்தையாய்த்தோன்றும். தோன்றவே சுவர்க்காதி பதங்களைத் தான் அநுபவிக்க வேண்டுமென்னும் இச்சையும் நீங்கும். அங்ஙனம் இச்சை நீங்குவதால் ஆகாமியப்பிரதிபந்தம் நீங்கும்.

## தத்துவ ஞானத்தின் பலன்

தத்துவ ஞானதின் பலன் முத்தியென்று பொதுவாகக்கூறினும் அதன்சிறப்பு நான்காகும். அவையாவன:

(1) துக்காபாவம் (துக்க+அபாவம்) — துக்க நிவிருத்தி, அஃதாவது துக்கமின்மை.

(2) சர்வகாமாப்தி (சர்வ+காம+ஆப்தி) - யாவற்றினும் நிறைந்திருக்கின்ற சுகத்தையடைதல். இதைப் பரமானந்தப்பிராப்தி யென்றுங்கூறுவர்.



(3) கிருத கிருத்தியம் — செய்ய வேண்டிய கருமமனைத்தையுஞ் செய்துமுடித்தல்.

(4) பிராப்திப் பிராப்பியம் — அடைய வேண்டிய அனைத்தையும் அடைதல்.

### துக்காபாவம்

(1) சீவன்முத்த னிடத்துக் கர்த்தா போக்தாத் தன்மை யில்லாமையினாலும், அவன் சிவானந்த சொரூபமாய் விளங்குவ தினாலுந் துக்கம் அவனிடத்தின்றாமென்க. தேகத்திற்கு நோயுண்டாவதினாற் சீவன்முத்தன் அவஸ்தைப்படுவது போலப் பிறருடைய தூலதிருஷ்டிக்குத் தோற்றிடினும், வாஸ்த்தவத்தில் துக்கமின்றாம். இதன் விளக்கம் பின்வருமாறு:-

மித்தியா வடிவ மாயா காரியமான ஸ்தூல சரீரம் முதலிய வற்றிற்கு விலட்சணமாயுள்ளது ஆன்மாவின் நிஜசொரூபம். அஃது அகர்த்தாவாம்; அதுவே தனது வடிவமாமென்று அநுபூதியால் அறிந்தபிறகு ஞானிக்குப்பரமார்த்தமாக கர்த்தாபோக்தாத் தன்மை இல்லாமையால், ஸ்தூலம் முதலிய சரீரங்களினது துக்கம் அவனது நிஜசொருபத்திற் கின்றாமென்க.

## சர்வகாமாப்தி

(2) சீவன்முத்தன் சிவானந்த சொரூபமாய் விளங்குவதினாலும்; ஏனைய ஆனந்தமனைத்துந் தனது சொரூபானந்தக் கடலின் திவலைகளாகத் தோற்றுவதினாலும் அவன் சர்வானந்தங்களையும் அடைந்தவனேயாமென்க.

## கிருதகிருத்தியம்

(3) அஞ்ஞான தசையில் மனிதர்கள் செய்யுந் தொழில் பலவகையாயிருக்கும். இகலோக பரலோக சுகம் வேண்டினோர் கர்த்தா போக்தாத் தன்மையுடன் இகபரவிவகாரங்களில் ஈடுபடுவர். ஞானதசையில் (அஃதாவது தீவிரமோட்ச விருப்பமுடைய காலத்தில்) முமுட்சுக்கள் ஞானசாஸ்திர விசாரணைகளிலும் மெய்ஞ்ஞான சாதனைகளிலும் ஈடுபடுவர். இவ்விரண்டு தசையுங் கழன்ற பரிபூரண தசையில் சீவன்முத்தனுக்குச் செய்ய வேண்டிய தொழிலெதுவுமில்லை; பரிபூரணமாய் விளங்கலின். பரிபூரணமாய் விளங்கலென்பது தானேயனைத்துமாய் விளங்கல். இத்தசையில் எத்தொழிலைச் செய்தும் செய்திலன்; கர்த்தாபோக்தாத் தன்மையில்லாததினால். சீவன்முத்தன் உள்ளஞ் சந்ததமும் மோன நிலையில் இருப்பதாற் பாசமுயற்சி யெய்தாதென்க. இதைப் பற்றிப் பின்வருஞ் செய்யுள் விரிவாக விளக்குகிறது.



எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே — வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலும்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

(பட்டணத்துப் பிள்ளையார்)

குறிப்பு:-

எந்தத்தொழிலைச் செய்யினும், எத்தகைய உபத்திரவமுற்றாலும், சீவன்முத்தர்களுடைய உள்ளம் மோன நிலையிலே பதிந்திருக்கும்; (எது போல வென்னில்) சாதுரியமாய் அசைந்து விளையாடிக்கொண்டு இரண்டு கைகளை வீசிக்கொண்டு வந்தாலும், தாதியின் மனம் தண்ணீர்க் குடத்திலே தான் இருக்கும்.

## பிராப்திப் பிராப்பியம்

(4) தான் குறித்ததோர் ஊரையடைய விருப்பமுள்ளவனுக்கு அவ்வூரையடைந்த பின்னர் மீண்டும் அதனை யடைய வேண்டுமென்பது எங்ஙன மின்றே, அங்ஙனமே சிவசொரூபமாய் விளங்கும் சீவன்முத்தன் அடைய வேண்டியது எதுவும் இன்றாம். சிவ சொரூபத்தை யடைந்தவிடத்து அடையவேண்டிய அனைத்தையும் அடைந்ததாம். இதைப்பற்றிப் பின்வருஞ் செய்யுள் விரிவாக விளக்குகிறது :—

மாத்தா னவத்தையும் மாயா புரியின் மயக்கத்தையும்
நீத்தார் தமக்கொரு நிட்டையுண்டோ நித்தனன்பு கொண்டு
வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று
பார்த்தா லுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே

குறிப்பு:-

மாத்தான் அவத்தையும் – விரோதியாய் விளங்கும் மூன்று அவஸ்தைகளையும்; மாயாபுரியின் மயக்கத்தையும்—மாயை காரணமாக வந்த தூலசூக்கும காரண சரீரங்களால் உண்டாகும் மயக்கத்தையும்; நீத்தார்தமக்கு — பரஞானத்தால் மேற்கூறியவற்றை விட்ட சீவன்முத்தர் தமக்கு. (நீத்தல் — விடல்)

முத்தி (மோக்ஷம்) சீவன்முத்தியென்றும் விதேக முத்தியென்றும் இருவகைத்தாம்.

## சீவன்முத்தி

தேகாதிப் பிரபஞ்சந் தோன்றிக் கொண்டிருக்கச் சிவசொரூபமாய் நிலைத்தல் சீவன்முத்தியாம்; அஃதாவது சீவித்துக் கொண்டிருக்கும் பொழுதே சுவாநுபூதியைப் பெற்று, அதனாலடைந்த சுகவடிவத்தோடுங் கூடித் தேகாபிமானமின்றிச் சுகித்திருப்பதாம். இந்நிலையில் தேகாதிப் பிரபஞ்சம் சின்மயமாக வேனும்



சிதானந்தமாக வேனும் விளங்கும். இந்நிலையில் உபதேசாதி விவகாரங்களும் உண்டு.

எங்கெங்கும் பார்த்தாலும் இன்புருவாய் நீக்கமின்றித்
தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ!

என்பது தாயுமானசுவாமிகள் அருள்வாக்கு.

## விதேகமுத்தி

தேகாதிப் பிரபஞ்சத் தோற்றமின்றிச் சிவசொரூபமாய் நிலைத்தல் விதேகமுத்தியாம். அஃதாவது காரண சரீரத்தோடு ஏனைய இரண்டு சரீரமும் நாசமாகிச் சிதானந்த சிவசொரூபமாதலாம். சீவன்முத்தி மேலீடே விதேகமுத்தியாம் (விதேகம் — தேக நீக்கம்) விதேக முத்தியில் எத்தகைய விவகாரமும் இல்லையெனவுணர்க. விதேகமுத்தியைப் பற்றிப் பின்வருமாறு வேதாந்த சூடாமணி கூறுகிறது:-

பரமமா ஞானந்தோன் றுதலுமே கதிர்முன்
பாயிருள்போல் அஞ்ஞானத் துடனதன்கா ரியமாம்
புரமுதலா யினவனைத்து மகன்றிடுத ருனே
புகலரிய விதேககைை வல்லியமென் றிசைப்பர்.

உரை:-

மேலான சிவஞானம் உதயமாகவும், சூரியன் முன்

நீங்கும் இருளைப் போல, அஞ்ஞானத்தோடு அதனது காரியமான தேகமாதிய தத்துவங்களனைத்தும் நசிப்பதே சொல்லுதற்கரிய விதேகமுத்தியென்று சத்துக்கள் உரைப்பார்கள்.

மேலுங் கைவல்லியநவநீதம் பின்வருஞ் செய்யுள்களால் விதேகமுத்தியைப் பற்றி விளக்குகிறது.

அரியமெய்ஞ் ஞானத் தீயா லவித்தையா முடனீ ருமே
பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழுமந் நேரம்
உரியசூக் குமச ரீரம் உலையிரும் புண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தி லிறந்து போமே.

உரை:-

கிடைத்தற்கரிய மெய்ஞ்ஞான மென்னும் அக்கினியினுல் அவித்தை யென்னுங் காரண சரீரம் பஸ்பமாம்; பருத்த தூலதேகமும் பிராரத்த முடிவுகாலத்திற் பிணமாய் விழுந்து விடும், அக்கணமே தனக்கென்றுரிய சூக்கும சரீரமோ உலைக்களத்தில் அக்கினியிற் காய்ச்சி வெளியிலெடுத்த இரும்பிற்பெய்த நீரெங்ஙனஞ் சுண்டிப்போமோ அங்ஙனமே துரியமாயும் வியாபகமாயும் விளங்குகின்ற சிவசொரூபத்தில் நாசமாம்.



குறிப்பு :-

அவித்யாநாசம் வேறுன்றுலன்மையின் ஞானத்தீயாலெனவும், தூல நாசம் வேறுன்றுலன்மையின் காலத்தாலெனவும், அவித்தைநீருய விடத்து மீண்டும் முளைக்காதென்பது தோன்றப் பிணமாகிவிழுமெனவுங் கூறினுர், அவித்யா நாசம்வரினும் சொரூபம் உதியா விடத்து, அவித்தை மீண்டும் உதிக்கு மென்பது தோன்ற அந்நேரம் உரிய சூக்குமசரீரம் உலையிரும் புண்ட நீர்போல் துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்து போமேயெனவுங்கூறினுர். அவித்தையாகிய காரண சரீரம் நீங்காதவளவும் மனமாகிய சூக்குமசரீரங் கணக்கின்றி வந்தழியும். அம்மனமாகியசூக்குமசரீரம்நீங்காதவளவும் தூல சரீரங்கணக்கின்றி வந்தழியும். சொரூபஞானமுதித்தும் அகண்டமாயை (பிரபஞ்சமாயை) ஒழியாதவிடத்துப் பரோட்ச ஞானத்தால் ஒழிந்தஅவித்தை மீண்டும் உதிக்குமென்க. சகசநிட்டையினுலே அகண்டமாயை நீங்கும்.

கடமெனு முபாதி போனுற் ககனமொன் றுனுற் போல
உடலெனு முபாதி போன வுத்தரஞ் சீவன் முத்தர்
அடிமுடி நடுவு மின்றி யகம்புற மின்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்ப ரென்றும்.

**உரை:-**

குடமெனும் உபாதியழிந்துபோனல் நான்காகாயமும் ஏகமாவதெங்ஙனமோ அங்ஙனமே காரண சரீரத்தோடு ஏனைய விரண்டு சரீரமும் ஒக்க நசிக்கும். நசித்தவக் கணமே சீவன்முத்தர்கள் அடிமுடி நடுவென்பதின்றியும் அகம் புறமென்பதின்றியும் இருந்த வண்ணமிருந்து என்றும் ஒருதகைத்தாய் விளங்குகின்ற விதேகமுத்தி நிலையை அடைந்திருப்பர்.

குறிப்பு:-

கடமென்றாலும் குடமென்றாலும் ஒக்கும். கடம் இங்கே மூன்று தேகங்களையுங் குறிக்கிறது. "உடலெனும் உபாதிபோன உத்தரம்" என்பதற்குப் பொருள் மாயை, அவித்தை யென்னுங் காரண சரீரத்தைக் கொள்ள வேண்டும். சூக்கும, தூலதனு நாசத்தான் முத்தி பெற்றார் யாண்டுமில்லை; உண்டெனில் அது அற்பசுருதியெனக் கொள்க. மெய்ஞ்ஞானத்தால் அஞ்ஞானம் அழிகிறது; மற்றெதினலுமல்ல. அஞ்ஞானம் நீங்காதவரைக்கும் பிறவி வந்து கொண்டேயிருக்கும். ஆதலால் கடம் இவ்விடத்தில் அஞ்ஞானத்துடன் ஏனைய சூக்கும தூல உபாதிகளையுங் குறிக்கிறது.



## ஞானகுருபரன் மகிமை

ஞானசற்குருவினது கருணையினலே பரிபக்குவம் வாய்ந்த சீடனது உள்ளத்தில் தோன்றாத திருவருள் தோன்றுகிறது. அங்ஙனம் தோன்றாவிடத்து சிவஞானமும் அதன் பெறுபேறும் உண்டாதல் அரிதினும் அரிது. இதைப்பற்றிப் பின்வருஞ் செய்யுள்கள் விரிவாக விளக்குகின்றன:-

குருவரு ளாலே கூடுவ தல்லால்
திருவரு ளுருதெனத் தெரிந்திட வுரைத்தோன்
குருவுரு வருளெனக் கொண்டபின் குறையாப்
பொருண்மய மாமெனப் புகன்றிடு போதன்
(அருள்வாக்கிய அகவல்)

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே
(திருமந்திரம்)

தன்னை யறிந்து தனிவெளியுந் தானகி
இன்பநிலை தேக்கி யிருப்பவரே — மன்னுதவ
ஞானகுரு அன்னவரை நம்பியருள் பெற்றக்கால்
ஈனப் பிறவி யிறும்

**குறிப்பு:-**

தனிவெளி — சிதாகாசம் (ஞானகாசம்)
தேக்கி — நிறைந்து.
மன்னுதவ — நிலைபெற்றதவத்தையுடைய
பிறவி இறும் — பிறப்பு நீங்கும்.

தூய குருவருளே தோன்றாத் திருவருளில்
தோய வழிகாட்டுந் துன்பகல — நேயமுடன்
பாராது பார்த்துப் பழகியது தானாகில்
வாராது வன்பிறவி வாழ்வு.

ஞான சாஸ்திரங்களைப் படிப்பதனால் உண்டாகும் ஞானம் அபரஞானம்; சிவஞானமல்ல. கர்த்தாபோக் தாத்தன்மை அபரஞானத்தினால் நீங்காது; அநுபூதி ஞானத்தினாலேயே நீங்கும்.

ஞானசாஸ்திரங்களால் உண்டான அபரஞானத்தையும் யுக்திக்குப் பொருந்துமாறு காட்டுதற்கு ஞான சற்குரு சகாயம் வேண்டும். சகாயமின்றேல் சீடன் பொருளல்லவற்றைப் பொருளெனக் கருதி மருளுறுவன். இதுகூடும் இதுகூடாதெனத் தன்னறிவில் பொருத்த முறத்தோற்றுவது யுக்தி யெனப்படும். எத்தனையோ விஷயங்களை உபசாரமாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவற்றின் அந்தரங்கக் கருத்தை ஞானசற்குருவினது உதவியின்றி அறியமுடியாது.



ஞானசற்குரு வாயிலாகத் தத்துவார்த் தங்களைக் கேட்டலால் உண்டாவது பரோக்ஷஞானம். கேட்ட அளவாகக் கருதி நிச்சயிக்கும் ஞானம் பரோக்ஷ ஞான மெனப்படும்; அஃதாவது குரவன் வாக்கியத்தால் தன்னைத் தேகாதி தத்துவங்களுக்குச் சாட்சியாய் விளங்கும் ஆன்மசொரூப மெனவும், அது எத்தகைய தாயிருக்குமெனவும் நிச்சயிக்கும்ஞானம். இப்பரோக்ஷ ஞானத்தினால் வஸ்துநிச்சயம் விளங்கும்.

வஸ்துநிச்சயத்தைக் குருமுகமாய் அறிந்தபின்பு ஞானசாதனையின் முதிர்ச்சியால் உண்டாவது அபரோக்ஷ ஞானம். கேட்ட அளவாக நில்லாது தானே நேரிற் கண்டறிவது அபரோக்ஷ ஞானமெனப்படும் (அநுபூதி ஞானம்). ஞானவதிகாரி ஏகமெனலைச் சொல்லாற் கணியாது கண்ணுற்காணத் துணியின் அதுபயன்படும். கேட்டவண்ணம் பாவித்தல் பாவனையோகம்; பாவித்த வண்ணம் நேரேகாண்டலைத்தான் ஞானகதப் பிரத்தி யட்சமென்பர். பிரத்தியட்ச ஞானத்தால் அஞ்ஞானம் நாசமாம்; அனைத்துஞ் சின்மாத்திரமாக விளங்கும். விளங்கவே அயலெனல் ஏது? இதுவே பரஞானம்; பர ஞானத்தால் விளைவது சிவானந்தம். அபரோக்ஷ ஞானத்தைப் பற்றியும் அதனால் ஏற்படும் பயனைப்பற் றியும் பின்வருஞ் செய்யுள் விளக்குகிறது:—

தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தந்தானுதல் அபரோக்ஷ ஞான மாகுங்
கர்த்தனுஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போதல்
முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாமே.

(கைவல்லிய நவநீதம்)

மேற்கூறிய அநுபூதிநிலைகள் ஞான சற்குருவினது சகாயத்தால் உண்டாகின்றன. பரிபக்குவ முள்ள சீடன் காலக்கிரமத்தில் தன்னை மோனப்பொருளாகவே கண்டு திடங்கொண்டு சகச நிலையில் வாழ்கிறுன். இதைப்பற்றிப் பின்வரும் நேரிசை வெண்பா கூறுகிறது:—

உள்ளுணர்வை உற்றுணரில் ஓயாச் சுயஞ்சோதி
உள்ளமதைக் கொள்ளைகொண் டோங்கிநிற்குந்-தெள்ளமுத
மூறியெங்கு மூடிடுமே மோனசிவம் தானெனவே
தேறி யிருத்தல் சிறப்பு.

என்றும் எவ்விடத்தும் இன்புற்றிருக்கும் முறையைப் பின்வரும் பாடல் இனிதாக எடுத்துக் கூறுகிறது. அன்பர்கள் ஞானசற்குருவினது கருணையால் அவ்வண்ணம் இருந்து பெறுதற்கரிய பேற்றைப் பெற்று வாழ்வார்களாக!



எங்கு மிருப்ப திறையருள் பூரணம்
அங்கு தங்கிட வானது மங்களம்
பொங்கி விளைந்தது பூரண மங்களம்
எங்குந் தங்குக வெய்துமங் களமே!

சிவஞான விளக்கம்
முற்றிற்று.



கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடுதலால் ஆத்மா அநுபூதியில் அறியப்படுகிறது. அங்ஙனம் ஆத்மா அறியப்படும்பொழுது அனைத்தின் இயல்பும் அறியப்படுகிறது.

(உபநிஷத் வாக்கியம்)

மனைவி கணவனை நேசிப்பது கணவனுடைய சரீரத்தை முன்னிட்டல்ல; கணவனிடத்திலுள்ள ஆத்மாவை முன்னிட்டே. கணவன் மனைவியை நேசிப்பது மனைவியினுடைய சரீரத்தை முன்னிட்டல்ல; மனைவியினிடத்துள்ள ஆத்மாவை முன்னிட்டே. பெற்றோர்கள் புத்திரர்களை நேசிப்பது புத்திரர்களுடைய சரீரங்களை முன்னிட்டல்ல; அவர்களிடத்துள்ள ஆத்மாவை முன்னிட்டே. அங்ஙனமே செல்வந்தன், பிராமணன், க்ஷத்திரியன் ஆகிய அனைவரும் ஆத்மாவை முன்னிட்டே நேசிக்கப் படுகின்றனர்.

எனவே ஆத்மாவே கேட்கப்பட வேண்டும்; சிந்திக்கப்படவேண்டும்; இங்ஙனம் பயிற்சி பெறுவதன் மூலம் ஆத்மா அறியப்படுவதாகிறது. ஆத்மா அநுபூதியில் அறியப்படுகிறபொழுது எல்லாம் அறியப்பட்டதாகிறது.

(யாக்ஞவல்கியர்)

